மலர் 15 இதழ் 269

NAVAMANI (Tamil Daily) MADRAS

4 பக்கம் 25 காசு

Regd M No. 7897

Phone No. 761902, 76169

"நவமணி"
சந்தா விகிதம்
1—9—74 முதல்
தனிப் பிரதி 25 காசு

| | உள்ளூர் ஏஜண்டு மூலம் | தபால் மூலம் |
|---|---|---|
| 1 மாதம் | ரூ. 7-50 | ரூ. 8-00 |
| 3 மாதம் | ரூ. 22-50 | ரூ. 24-00 |
| 6 மாதம் | ரூ. 45-00 | ரூ. 48-00 |
| 1 வருடம் | ரூ. 90-00 | ரூ. 96-00 |

# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 13—6—75 வெள்ளி

வெளியூர் 14—6—75 சனி



# பஸ் கட்டணம் உயருமா?

## மந்திரி ராமச்சந்திரன் பேட்டி

சென்னை, ஜூன் 13—அரசாங்க பஸ் கட்டணம் உயர்த்தப்படலாம் என்று போக்குவரத்து அமைச்சர் ராமச்சந்திரன் கூறினார்.

இந்த தகவலை அவர் இன்று சென்னையில் நிருபர்களிடம் வெளியிட்டார்.

அரசு பஸ் போக்குவரத்து கழகங்களில் ஜப்பானிய திட்டம் அமுலாக்கப்படுவதால் சர்க்காருக்கு ஆண்டு தோறும் ஒரு கோடி ரூபாய் கூடுதல் செலவாகும் என்று அவர் கூறினார்.

இந்த நஷ்டத்தைச் சரிக்கட்ட பஸ் கட்டணம் உயர்த்தப்படுமா என்று மந்திரியிடம் கேட்கப்பட்டது.

அதற்கு பதிலளிக்கையில் பஸ் கட்டணம் உயர்த்தப்படலாம் என்றும் மந்திரி கூறினார்.

### ஜப்பான் திட்டம்

மந்திரி மேலும் சொன்னதாவது "அரசு பஸ் போக்குவரத்துத் துறையில் 38 ஆயிரம் பேர் வேலை செய்கிறார்கள். அவர்களில் அரசின் நேரடி நிர்வாகத்தில் உள்ள தொலை தூர பஸ் துறையில் 3500 பேர் வேலைசெய்கிறார்கள் அவர்களுக்கு ஜப்பானிய திட்டம் கிடையாது. பாக்கி உள்ள 34,500 பேர் அரசு போக்குவரத்துக் கழகங்களில் வேலை செய்கிறார்கள். அவர்களில் ஜப்பானிய திட்டம் வேண்டாம் என்று பதில் அளித்தவர்களின் எண்ணிக்கை 200 பேர்கள்.

இந்த திட்டத்தை ஏற்கிறார்களா அல்லது மறுக்கிறார்களா என்று எந்த வித பதிலும் அளிக்காதவர்களின் எண்ணிக்கை 5600 என்றார் மந்திரி ராமச்சந்திரன்.

பழைய காங்கிரஸ் தொழிலாளர்கள் திருச்சி பகுதியில் ஜப்பானியத் திட்டத்தை ஏற்றதாகவும் சென்னை பகுதியில் எதிர்ப்பதாகவும் அமைச்சர் கூறினார்.

பாண்டியன் போக்குவரத்துக் கழகத்தில் ஐ.என்.டி.யூ.சி. இந்த திட்டத்தை ஏற்றுக் கொண்டதாகவும் அவர் கூறினார்.

பல்லவன்போக்குவரத்துகழகம் பொறுத்தவரையில்இதில் 9979 நிரந்தர தொழிலாளர்களில் 40 பேர் தான் இத்த ஜப்பானிய திட்டத்தை எதிர்ப்பதாகவும் 2370 பேர் இதுபற்றி கருத்து எதுவும் தெரிவிக்கவில்லை என்று மந்திரி கூறினார்.

தினந்தோறும் சுமார் 34 லட்சம் பயணிகள்பிரயாணம் செய்கிற அரசு பஸ் போக்குவரத்து துறையில் ஸ்டிரைக் செய்வது சமுதாய நலனுக்கு எதிரானது என்றும், அதனால் மக்களுடைய நல்லெண்ணத்தை தொழிலாளர்கள் இழந்து விடுவார்கள் என்றும் மந்திரி கூறினார்.

---

சி. ஐ. டி. யூ. புகார்

## '200 ஊழியர்கள் திடீர் இடமாற்றம்'

சென்னை, ஜூன் 13— அரசு பஸ் போக்கு வரத்துக் கழகத்தில்பணிசெய்யும்சுமார் 200 பேர்கள் திடீரென்று இடமாற்றம்செய்யப்பட்டிருக்கிறார்கள் என்று சி.ஐ.டி.யூ. தொழிற்சங்க தலைவர் சுந்தரராசன் கூறினார்.

இந்த தகவலை இன்று சென்னையில் அவர் நவமணி நிருபரிடம் வெளியிட்டார். அவர் கூறியதாவது:—

எந்த இடத்திற்கு இவர்கள் மாற்றப்பட்டிருக்கின்றார்கள் என்பது அவர்களுக்கு தெரிவிக்கப்படவில்லை, இடம் மாற்றம் செய்யப்பட்ட ஊழியர்கள் அரசுபோக்குவரத்து துறை இயக்குனரை சந்திக்க வேண்டும் என்று கோரப்பட்டிருக்கிறார்கள். இத்தகைய நடவடிக்கைகள் மூலம் பஸ் ஊழியர்களின் ஸ்டிரைக்கை உடைக்க அரசு முயற்சிக்கிறது என்றார் சவுந்திரராசன்.

### ராகவானந்தம்

அரசு பஸ் ஊழியர்களின் 36 கோரிக்கைகளில் அடிப்படை சம்பளம், பஞ்சப்படி போன்ற 7 முக்கிய கோரிக்கைகளைத் தவிர மற்ற கோரிக்கைகள் பற்றி விவாதிக்க போக்குவரத்துத்துறை அமைச்சர் ராமச்சந்திரன் தயாராக இருப்பதாக போராட்ட கமிட்டி தலைவர்களிடம் கூறப்பட்டது.

இந்த தகவலை அ.தி.மு.க. தொழிற் சங்கத் தலைவர் ராகவானந்தம் இன்று சென்னையில் வெளியிட்டார்,

போராட்ட கமிட்டிஉறுப்பினர்கள் முடியாது என்று உடனே பதில் கூறிவிட்டனர்.

இன்று திருச்சி பகுதிகளில் அரசு பஸ் ஊழியர்கள் ஸ்டிரைக்கிற்கு ஆதரவு திரட்ட வி. பி. சிந்தன் சென்று இருக்கிறார். மதுரை பகுதியில் நாளை (14ந் தேதி) ராகவானந்தம் ஆதரவு திரட்டுவார். நாளையும் அதற்கு மறு தினமும் கோவை பகுதியில் அதிமுக தொழிற் சங்கத் தலைவர் எஸ். வி. கிருஷ்ணன் ஆதரவு திரட்டுவார். ஏற்கெனவே சேலம் பகுதியில் சிஐடியூ தொழிற் சங்கத்தலைவர் சவுந்தரராசன் ஆதரவு திரட்டி உள்ளார்.

---

## என். வி. என். அமெரிக்கா போகிறார்

சென்னை, ஜூன் 13— சிகிச்சைக்காக அமைச்சர் என். வி. நடராசன் வருகிற 19-ந் தேதி அமெரிக்காவுக்குப் புறப்படுகிறார் என்று முதல்வர் கருணாநிதி நிருபர்களிடம் கூறினார்.

நியூயார்க் அருகில் உள்ள பெடராய்ட்நகரில் அமைச்சர் என். வி. நடராசன் சிகிச்சை பெறுவார்.

அமைச்சருடன் அவருடைய மனைவியும் ஒரு டாக்டரும் உடன் செல்கின்றனர்.

---

## பஸ்களில் இந்திரா-ஆதரவு நோட்டீசுகள்

சென்னை, ஜூன் 13— கடத்தல்காரர்களை ஒடுக்கிய இந்திராவின் தலைமை என்றும் தேவை. மன்னர் மானியத்தை ஒழித்த இந்திராவின் தலைமை மக்களுக்குத் தேவை" என்று எழுதப்பட்ட நோட்டீஸ்கள் சென்னை நகர பஸ்களில இன்று ஒட்டப்பட்டிருக்கின்றன.

---

கருணாநிதி கருத்து

## "இந்திரா ராஜிநாமா செய்திருந்தால் பாராட்டியிருப்போம்"

சென்னை, ஜூன் 13— "கோர்ட் தீர்ப்பைத் தொடர்ந்து பிரதமர் இந்திரா ராஜிநாமா செய்திருந்தால் அதை பாராட்டியிருப்போம்" என்று தமிழக முதல்வர் கருணாநிதி கூறினார்.

நிருபர்களிடம் கருணாநிதி கூறியதாவது:—

இந்திரகாந்தியின் தேர்தல் செல்லாது என்று கோர்ட் தீர்ப்பளித்ததை யொட்டி இனி அவர்கள் என்ன முடிவு எடுக்கிறார்களோ அந்த முடிவு தான் இந்தியாவின் எதிர்கால அரசியலுக்கு முன் மாதிரியாகத் திகழும். திமுகவுக்கு இப்படி ஒரு நிலைமை ஏற்பட்டிருந்தால் இந்திரா காங்கிரஸ் உட்பட எதிர்க் கட்சிகள் எல்லாம் எப்படி கூப்பாடுபோட்டிருப்பார்கள்! இந்த சூழ்நிலையிலும் திமுக தனது பெருந்தன்மையைக் காட்டி வருகிறது. நாங்கள் எப்போதும இந்திராவை எதிர்க்கும் நிலையை எடுத்ததில்லை. இந்திரா காந்தி ராஜிநாமா செய்திருந்தால் பாராட்டியிருப்போம். அது கூட நான் குறிப்பிட்டிருப்பது போல நல்ல முன்மாதிரியாக இருந்திருக்கும். நாங்கள் சொன்ன கருத்தைப் புரிந்து கொண்டு நடந்தால் நல்லது.

## இந்திரா ஆதரவு ஊர்வலங்கள்

புதுடெல்லி, ஜூன் 13 இந்திராவிற்கு எதிரான கோர்ட் -தீர்ப்பை அடுத்து நாடு பூராவும் இந்திரா ஆதரவு ஊர்வலங்கள் நடைபெற்று இருக்கின்றன.

கல்கத்தாவில் பல இடங்களில் இந்திரா பதவியில் நீடிக்க வேண்டும் என்று கோரி ஊர்வலங்கள் நடத்தப்பட்டன.

இன்று புதுடெல்லியில் திடீரென்று ஓடவில்லை. பஸ் ஊழியர்கள் இந்திரா ஆதரவு ஊர்வலம் நடத்த சென்று விட்டதே காரணம் என்று தெரிகிறது.

தனிப்பட்ட முறையில் நாங்கள் இந்திராவை எதிர்ப்பதில்லை.

---

குஜராத் மாநிலத்தில்

# ஜனதா முன்னணி ஆட்சி ஏற்படும்: மொரார்ஜி நம்பிக்கை

பம்பாய், ஜூன் 13— குஜராத்தில் ஜனதா முன்னணி ஆட்சி அமைக்கும் என்று இந்த முன்னணியின் தலைவரான மொரார்ஜி தேசாய் அறிவித்துள்ளார்.

குஜராத் தேர்தலில் எந்தக் கட்சிக்கும் பூரண மெஜாரிடி கிடைக்காமல் போனது வருந்தத்தக்கதே என்றும அவர் சொன்னார்.

மொரார்ஜிதேசாய் நாளைய தினம் ஆமதாபாத் செல்கிறார்.

5 கட்சிகள் அடங்கிய ஜனதா முன்னணி எம். எல். ஏ.க்கள் நாளை 14ந் தேதி ஆமதாபாத்தில் கூடி அடுத்து என்ன செய்வது என்பது பற்றி முடிவு செய்வர்.

இக் கூட்டத்தில் ஜனதா முன்னணியின் தலைவரான மொரார்ஜிதேசாய் கலந்து கொள்வார். முன்னணியில அடங்கிய கட்சிகளின் தலைவர்களும் இக்கூட்டத்தில் கலந்து கொள்வர் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

---

## ஸ்டிரைக் வேண்டாம்: மந்திரி கோரிக்கை

அரசு பஸ் போக்குவரத்து ஊழியர்கள் இந்த மாதம் 15 ந் தேதி நள்ளிரவில் ஆரம்பிக்க இருக்கிற வேலை நிறுத்தப் போராட்டத்தைக் கைவிட வேண்டும் என்று மந்திரி வேண்டுகோள் விடுத்தார்.

"இந்த ஸ்டிரைக் சட்ட விரோதமானது; தேவையற்றது; தீமை விளைவிக்கக் கூடியது" என்றார் மந்திரி.

சமரச பேச்சு வார்த்தை நடத்த நாங்கள் எப்போதும் தயங்கியதில்லை இனியும் பேச்சுக்குத் தயார் என்று மந்திரி மேலும் கூறினார்.

"பஸ் ஊழியர்களின் ஸ்டிரைக் நடக்காது" என்றும் சேரன், சோழன், பாண்டியன், பெரியார், அண்ணா ஆகிய போக்குவரத்துக் கழகங்களின் தொழிற்சங்கங்கள் ஜப்பானிய திட்டத்தை ஏற்றுக் கொண்டுவிட்டதாகவும் மந்திரி கூறினார்.

கட்டபொம்மன் போக்குவரத்து கழகங்களைபொறுத்த வரை அந்த கழக தொழிலாளர்களுக்கு இப்போதுதான் "ஆப்ஷன் பாரம்" கொடுக்கப்பட்டுவருவதாக அவர் கூறினார்.

---

## ரூ. 40,000 தந்திகம்பிகள் பிடிபட்டன 4 பேர் கைது

சென்னை, ஜூன் 13— சென்னை நகரில் பார்க் டவுனில் உள்ள ஒரு கடையில் ரூ. 40 ஆயிரம் மதிப்புள்ள தந்திக் கம்பிகளையும், அலுமினியக் கம்பிகளையும போலீசார் பறிமுதல் செய்தனர். இது தொடர்பாக 4 வாலிபர்கள் கைது செய்யப்பட்டுக் காவலில் வைக்கப்பட்டுள்ளனர்.

ஆந்திராவைச் சேர்ந்த பி. ராமமூர்த்தி (வயது 25), உசேன் பிரான் (வயது 28), சென்னையைச் சேர்ந்த பாபு (வயது 27), வைத்தியலிங்கம் (வயது 24) ஆகிய நான்கு வாலிபர்கள் கைது செய்யப்பட்டுக் காவலில் வைக்கப்பட்டுள்ளார்கள்.

---

## எந்த கட்சிக்கும் மெஜாரிட்டி இல்லை

ஆமதாபாத், ஜூன் 13— குஜராத் சட்டசபைக்கு நடந்த தேர்தலில் எத்தக்கட்சிக்கும் பூரண மெஜாரிட்டி கிடைக்கவில்லை. எனினும் புது காங்கிரசைவிட ஜனதா முன்னணிக்கே அதிக இடங்கள் கிடைத்துள்ளன.

கட்சி நிலவரம் வருமாறு—

| | |
|---|---|
| மொத்த இடங்கள் | 182 |
| தேர்தல் நடந்த இடங்கள் | 181 |
| முடிவு தெரிந்த இடங்கள் | 180 |
| ஜனதா முன்னணி | 86 |
| புது காங்கிரஸ் | 75 |
| கிசான் மஜ்தூர் | |
| மக்கள் கட்சி | 12 |
| சுயேச்சை | 7 |

இந்த சுயேச்சைகளில் பலர் ஜனதா முன்னணி ஆதரவுடன் போட்டியிட்டு வெற்றி பெற்றவர்கள்.

---

வார்னிஷ் குடித்து

# ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்ற 7 பேர் ஓட்டம்

சென்னை, ஜூன் 13— சென்னை நகரில் வார்னிஷ் குடித்து இறந்தவர்களின் எண்ணிக்கை 27-க்கு மேல் உயர்ந்திருக்கிறது. வார்னிஷ் குடித்ததல் மருத்துவமனைகளில் சிகிச்சைக்காக அனுமதிக்கப்பட்டவர்களின் எண்ணிக்கை 96 ஆகும். இதில் சிகிச்சை பெற்று வந்த 7 பேர் மருத்துவமனையிலிருந்து ஓடிவிட்டனர்.

கடந்த 10-ம் தேதி அனுமதிக்கப்பட்ட அண்ணாமலை, செல்வராஜ் ஆகியோர் சிகிச்சை பெற்று வருகிறார்கள். மருத்துவமனையிலிருந்து பூர்ண குணமடைந்த 9 பேர்கள் அன்றே வீட்டிற்கு அனுப்பப்பட்டனர். இதுவரை வார்னிஷ் குடித்து இறந்தவர்கள் எண்ணிக்கை 27 பேர். சிகிச்சை பெறும்போதே தப்பி ஓடியவர்கள் எண்ணிக்கை 7 ஆகும்.

வார்னிஷ் குடித்தவர்கள் அதிகம் பேர் மாண்டதற்குக் காரணம் இவர்கள் தாமதமாக மருத்துவமனையில் சேர்க்கப்பட்டதே என்று கூறப்படுகிறது. இதன் தொடர்பாக போலீசார் தீவிரமாக சென்னை நகரம் பூராவும் சாராயவேட்டை ஆடிவருகிறார்கள்.

1968-ம் ஆண்டில் இதே போன்று வார்னிஷ் குடித்து மருத்துவ மனையில் சிகிச்சை பெற்றவர்களுடன் ஒப்பிடுகையில் இந்த முறை விஷம் அதிகமாக கலந்திருந்ததாகவும் இவர்களின் குடிப்பழக்கம், கிடைக்குமிடம், குடித்த வார்னிஷ் நிறம் ஆகியவற்றைப் பற்றிய பூரா விபரங்களையும் மருத்துவமனை அதிகாரிகள் கேட்டறிந்துள்ளனர் என்றும் மருத்துவமனை அதிகாரி கூறினார்.

கருணாநிதி அறிவிப்பு

# காவிரி பிரச்னை பற்றி மீண்டும் சர்வகட்சி தலைவர்கள் மாநாடு

தஞ்சை, ஜூன் 13—காவிரி நீர் பிரச்னை பற்றி மீண்டும் சர்வகட்சித் தலைவர்களையும் கூட்டி முடிவு செய்யப்படும் என்று முதலமைச்சர் கருணாநிதி கூறினார்.

முத்துப்பேட்டையில் முதல்வர் கருணாநிதியை நிருபர்கள் பேட்டி கண்டனர். நிருபர்களின் கேள்வியும், முதல்வர் பதில்களும் பின்வருமாறு:

கேள்வி: பெரியார் சிலையை எம். ஜி. ஆர் செப்டம்பர் 17-ந் தேதி வைப்பதாகவும், அப்போது தங்கள் சிலையை வைப்பது பற்றி கேட்டதற்கு எம். ஜி. ஆர். நிருபர்களிடம் ஏதோ கேலியாகவும் பேசியிருக்கிறாரே.

முதல்வர்: பெரியார் சிலையை வைக்கும் இடத்தில் குதிரை சிலை கூடத்தான் இருக்கிறது என்று அவர் கூறியிருக்கிறார். பரவாயில்லை. என்னை குதிரையோடு ஒப்பிட்டாரே...! அவரோடு ஒப்பிடாமல் இருந்ததற்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

## தனியாக முடிவு செய்வதற்கில்லை

கேள்வி: காவிரி பிரச்னை பற்றி மூன்று மாநில அதிகாரிகள் மட்டத்தில் விவாதிக்க வேண்டும் என்றும் ஒரு முடிவுக்கு வரவேண்டும் என்றும் கேட்டிருக்கிறார்களே!

முதல்வர்: சலத்தை கைவிட்டுவிடவில்லை, என்று அறிக்கை விடுவதும், காவேரி பிரச்னை பற்றி மூன்று மாநில அதிகாரிகள் கலந்து பேச வேண்டும் என்று சொல்வதும் தி.மு.க.வும் தோழமைக்கட்சிகளும் 15-ந்தேதி நடத்தயிருக்கிற எழுச்சி நாளை முன்னிட்டு, மத்திய அரசு செய்யும் கண் துடைப்பாகும். 19-2-75ல் தமிழக அரசின் சார்பில் அனைத்துக்கட்சி தலைவர்களையும் அழைத்து காவிரி நீர் பிரச்சனையை நடுவர் தீர்ப்புக்கு விடவேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றி மத்திய அரசுக்கு அனுப்பியுள்ளோம். பல நினைவூட்டுக் கடிதங்களும் அனுப்பியுள்ளோம். இதுவரை அதற்கு பதிலளிக்காமல் இப்போது அதிகாரிகள் மட்டத்தில் பேசலாம் என்பது வேறு வழி காண்பிப்பதாக உள்ளது. இதைப் பற்றி பரிசீலிப்பதானால் அனைத்துக் கட்சித் தலைவர்களையும் கூட்டித்தான் முடிவு செய்ய வேண்டுமே தவிர. நான் தனியாக எந்த முடிவும் சொல்வதற்கில்லை.

கேள்வி: இந்திரா காந்தியின் தேர்தல் செல்லாது என்ற நீதிமன்ற தீர்ப்பு பற்றி முதல்வர் என்ற முறையில் என்ன சொல்கிறீர்கள்?

முதல்வர்: முதல் அமைச்சர் என்ற அளவில் 'இம்மீடியட்'டாக 'ரியாக்ட்' பண்ண விரும்பவில்லை.

கேள்வி: கழகத் தலைவர் என்கிற முறையில் என்ன சொல்கிறீர்கள்?

முதல்வர்: கழகத் தலைவர் என்ற முறையில் எங்கள் கழகத்தின மற்ற தலைவர்களைக் கலந்து கொண்டு என் கருத்தைத் தெரிவிப்பேன்.

இவ்வாறு முதலமைச்சர் கருணாநிதி கூறினார்.

# தி. மு. க. அரசு மீது சிவாஜி புகார்

பல்லடம், ஜூன் 13—விவசாயிகளுக்கு நன்மை செய்யாமல் விளம்பரத்தின் மூலமே தி. மு. க. வினர் ஆட்சியை காப்பாற்றி வருகிறார்கள் என்று சிவாஜி கணேசன் கூறினார்.

பல்லடத்தில் நடைபெற்ற விவசாயிகள் மாநாட்டில் பேசுகையில் சிவாஜிகணேசன் கூறியதாவது:

காங்கிரஸ் ஆட்சியில் இருந்தபோது விவசாயிகளின் முன்னேற்றத்துக்காக பல நல்ல காரியங்கள் செய்யப்பட்டது. விவசாயிகளும் கஷ்டம் இல்லாமல் வாழ்ந்தார்கள். ஆனால் காங்கிரஸ் தான் செய்த நன்மைகளை யெல்லாம் விளம்

(6-ம் பத்தி பார்க்க)

ஆற்று நீர்ப்பிரச்சினையில்

# புது காங்கிரஸ்- தி. மு. க. அலட்சியம்: காமராஜ் புகார்

சென்னை, ஜூன் 13—பாண்டியாறு புன்னம்புழா ஆற்று நீர்ப் பிரச்சினையில் புது காங்கிரஸ் கட்சியும் தி. மு. க.வும் அலட்சியம் காட்டி வருகிறது என்று காமராஜ் குற்றம் காட்டினார்.

பல்லடத்தில் காங்கிரஸ் விவசாயிகள் அரசியல்மாநாடு நடைபெற்றது.

காங்கிரஸ் தலைவர் பி. ராமச்சந்திரன் தலைமை வகித்தார்.

இதில் கலந்து கொண்டு காமராஜ் பேசியதாவது:—

பாண்டியாறு—புன்னம்புழாவுக்கு குறுக்கே அணை கட்டினால் பல்லடம் அவினாசி தாலூகாவில் உள்ள மக்களுக்கு நன்மை ஏற்படும்.

காங்கிரஸ் ஆட்சிக்காலத்தில் இதற்கான திட்டம் போடப்பட்டது. இத்திட்டத்தை நிறைவேற்றுவதற்குள் தி. மு. கழகம் ஆட்சிப் பொறுப்புக்கு வந்துவிட்டது.

இந்த திட்டம் நிறைவேற்றப்படுவதை ஆளும் காங்கிரசும் தி.மு.க. வும் ஒரு பிரச்னையாக்கிக் கொண்டு தேர்தலுக்கு அதைப் பயன்படுத்த நினைக்கிறார்கள்.

## இப்போது ஏன் அக்கறை?

சமீபத்தில் அண்ணூரில் புது காங்கிரஸ் மாநாடு நடத்தியதாக இங்கே சொன்னார்கள். இந்த மாநாட்டில் இந்தப் பிரச்னை பற்றி பேசினார்களாம். இது நாள்வரை இல்லாத அக்கறை இப்போது அவர்களுக்கு எப்படி திடீரென்று வந்தது என்று தெரியவில்லை. தேர்தலுக்காக இப்படியெல்லாம் அவர்கள் பேசுகிறார்கள் என்று ஏற்கனவே நான் ஒரு கூட்டத்தில் கூறினேன், இதைச் சொன்னால் என் மீது கோபப்படுகிறார்கள்.

பாண்டியாறு — புன்னம்புழா திட்டத்தை நிறைவேற்றுவதில் திமுக அரசு அக்கறை எடுத்துக்கொள்ளவில்லை என்று ஆளும் காங்கிரஸ் கூறுகிறது. ஆனால் நமது முதலமைச்சர் மத்திய ரசுமீது குறை கூறுகிறார். இப்படி இரண்டு ஆளும் கட்சிகளும் ஒருவரை ஒருவர் குறைசொல்லிக் கொண்டிருக்கிறார்கள்.

## நல்ல முடிவு

இந்த திட்டத்தில் இரண்டு அரசுகளுமே அக்கறை எடுத்துக் கொள்ள வேண்டும். கேரள அரசுடன் இது பற்றி பேசி நல்ல முடிவுகாண வேண்டும். ஆனால் இப்போது ஆட்சியில் உள்ளவர்களுக்கு இதற்கெல்லாம் நேரம் இல்லை.

இந்த ஆண்டு பருவ மழை தவறினால் நமக்கு இன்னும் பயங்கரமான கஷ்டங்கள் ஏற்படும். பட்டினிச்சாவுகள் கூட ஏற்படும்.

எல்லா மாநிலங்களிலும் ஆறுகள் ஓடுகின்றன. ஒவ்வொரு மாநிலத்தவரும் தங்கள் மாநிலத்தில் ஓடும் ஆறுகள் தங்களுக்கே சொந்தம் என்று நினைக்கிறார்கள் இப்படி நினைத்தால் இந்தியா ஒரே தேசம் என்ற உணர்ச்சிபோய் விடும். பிரதேச உணர்ச்சி வளர்ந்தால் தேசிய உணர்ச்சி மங்கிவிடும். இதனால் நாட்டுக்கும் சுதந்திரத்துக்கும் ஆபத்துவரும்.

## காங்கிரஸ் ஆட்சிதான் செய்தது

கண்ணிழந்தவர்களுக்கு, ஊனமுற்றவர்களுக்கு, விவசாயிகளுக்கு காங்கிரஸ் ஆட்சியில் ஒன்றுமே செய்யவில்லை என்கிறார் நமது முதலமைச்சர், உழவர்களுக்கு மாடு வாங்க, கிணறுவெட்ட காங்கிரஸ் ஆட்சி காலத்தில் கடன் கொடுக்கப்பட்டது. அரிஜனங்களுக்கு குடியிருக்க வீடு கட்டும் திட்டம் காங்கிரஸ் ஆட்சியில்தான் கொண்டு வரப்பட்டது.

பார்வை இழந்தவர்கள், ஊனமுற்றவர்கள் போன்றவர்களுக்கு தர்மசிந்தை உள்ளவர்கள் மூலம் சிகிச்சை அளிக்க வகை செய்யப்பட்டது. ஆனால் அதற்காக அரசு சார்பில் பலவந்தமாக யாரிடமும் வசூல் செய்யவில்லை. இப்போதுள்ளவர்கள் இதை வசூலுக்கு ஒரு கருவியாகப் பயன்படுத்துகிறார்கள்.

நாட்டில் வன்முறையும், குழப்பமும் அதிகமாகிக் கொண்டிருக்கிறது. சமீபத்தில் குஜராத்தில் நடந்த வன்முறையில் 4 பேர் இறந்து

4-ம் பத்தி பார்க்க

### நியூயார்க் பருத்தி மார்க்கெட்

நியூயார்க், ஜூன் 12—

| | |
|---|---|
| ஆரம்ப விலை | 44-80 |
| முடிவு விலை | 44-67 |

# டைரக்டர் ஏ. பி. என். மகள் திருமணம்

சென்னை, ஜூன் 13— சினிமா டைரக்டர் ஏ. பி. நாகராஜன் மகள் விஜயலட்சுமிக்கும், திருவொற்றியூர் முன்னாள் நகரசபைத் தலைவர் டி. எஸ். கோபாலின் மகன் ராஜா சண்முகத்திற்கும் சென்னையிலுள்ள ராஜேஸ்வரி கல்யாணமண்டபத்தில் நேற்று காலை திருமணம் நடந்தது.

சரியாக 9.45 மணிக்கு மணமகள் கழுத்தில் மணமகன் தாலி கட்டினார்

மணமகள், ஜரிகைபோட்ட பச்சை நிற பட்டுச் சேலையும் பச்சை ஜாக்கெட்டும் அணிந்திருந்தார். மலர்களாலும் நகைகளாலும் மணமகள் அலங்காரம் செய்யப்பட்டிருந்தாள்.

திருமணத்திற்கு வந்திருந்தவர்களை சினிமா நடிகைகள் மனோரமா, குட்டி பத்மினி, நடிகர் சிவகுமார் ஆகியோர் வரவேற்றனர், அமைச்சர் அன்பழகன் நடிகர் சிவாஜி கணேசன், அவர் சகோதரர் வி. சி. சண்முகம் ஆகியோர் குடும்பத்துடன் வந்திருந்தனர். மற்றும் நடிகர்கள் முத்துராமன் நம்பியார், நடிகைகள் குமாரி பத்மினி எம். என். ராஜம் சினிமா டைரக்டர்கள் மாதவன், விஜயன் பட அதிபர்கள் சின்னப்பா தேவர், உமாபதி, ஏ. வி. மெய்யப்பசெட்டியார் அரசியல் தலைவர்களில் ம. பொ. சி. குடும்பத்துடன் வந்திருந்தார். மற்றும் மதியழகன், டி. வி. நாராயணசாமி, போலீஸ் கமிஷனர் ஷெனாய் ஆகியோரும் வந்திருந்தனர்.

மாலை குன்னக்குடி வைத்தியநாதன் குழுவினரின் இசை நிகழ்ச்சி நடைபெற்றது.

திரையுலகப் பிரமுகர்கள் ஏராளமானபேர் நேரில் வந்து மணமக்களை வாழ்த்தினார்கள்.

2-ம் பத்தி தொடர்ச்சி

விட்டார்கள். அகிம்சா மூர்த்தி காந்திஜி பிறந்த மண்ணிலேயே இப்படி நடந்திருக்கிறது. வன்முறைகள் தடுத்து நிறுத்தப்பட வேண்டும் என்று காமராஜ் பேசினார்.

திருப்பூரில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் காமராஜ் பேசியதாவது:

ஓட்டு என்பதை வேடிக்கையாக நினைக்காதீர்கள், பணத்திற்கும் ஏமாற்றுவாக்குறுதிகளுக்கும் பலாத்காரத்திற்கும் பணிந்து தவறானவர்களுக்கு வாக்களித்து விடாதீர்கள்.

## உயிரைப்போன்ற வாக்குரிமை

ஓட்டுரிமை என்பது உயிரைப் போன்றது. நன்றாக யோசனை செய்து யோக்கியமானவர்களுக்குச் சத்தியத்தில் நம்பிக்கை உள்ளவர்களுக்கு தேசப்பற்றுள்ளவர்களுக்கு வாக்களியுங்கள்

இப்போதுள்ள சில அரசியல் தலைவர்கள் மக்களிடம் ஆவேச உணர்ச்சி உண்டாக்குகிறார்களே தவிர அறிவுணர்ச்சியைத் தூண்டவில்லை. ஆவேசமாகப் பேசுவது தான் மக்களுக்கும் பிடிக்கிறது. அறிவுணர்ச்சியை தூண்டினால் பேச்சு வேகமாக இல்லையே என்கிறார்கள். மக்கள் இந்தப் போக்கை மாற்றிக் கொண்டு சுபிட்சமாக வாழ நல்ல ஆட்சியை ஏற்படுத்த வேண்டும் என்று காமராஜ் பேசினார்.

நாட்டுநலனைக் கருதி பல கட்சிகள் கூட்டுச்சேருவதில் தவறு இல்லை. ஆனால், இப்போது ஏற்பட்டுவரும் கூட்டு பதவியைப் பிடிக்க ஒன்று சேரும் சந்தர்ப்பவாதக் கூட்டாகும் என்றும் காமராஜ் கூறினார்.

நெய்வேலி சுரங்க அபிவிருத்தி

# வெளிநாட்டிலிருந்து ரூ. 65 கோடிக்கு யந்திரங்கள் இறக்குமதி

புதுடெல்லி, ஜூன் 13—நெய்வேலியில் வெட்டி எடுக்கப்படும் பழுப்பு நிலக்கரியின் அளவை 35 லட்சம் டன்னிலிருந்து 65 லட்சம் டன்னாக உயர்த்துவதற்காக மேற்கு ஜெர்மனியிலிருந்து ரூ. 65 கோடிக்கு யந்திர சாதனங்களை இறக்குமதி செய்ய ஆர்டர் அளிக்கப்படுகிறது.

தமிழ் நாட்டில் மின்சாரப் பற்றாக்குறையைப் போக்க வேண்டுமானால் நெய்வேலியில் மின்சார உற்பத்தியை அதிகரித்தாக வேண்டும். அவ்விதம் அங்கு மின்சார உற்பத்தியை அதிகரிக்க வேண்டுமானால் நெய்வேலியில் பழுப்பு நிலக்கரியை வெட்டி எடுப்பதை அதிகரித்தாக வேண்டும்.

எனவேதான் நெய்வேலி பழுப்பு நிலக்கரி சுரங்க அபிவிருத்தி திட்டம் மேற்கொள்ளப்படுகிறது. இத்திட்டத்துக்கு மொத்தம் ரூ. 95 கோடி செலவாகும்.

## யந்திர சாதனங்கள்

அதிக பழுப்பு நிலக்கரியை வெட்டிஎடுக்க யந்திர சாதனங்கள் தேவை. இந்த யந்திர சாதனங்களை மேற்கு ஜெர்மனியைச் சேர்ந்த ஆறு நிறுவனங்கள் அளிக்கும். இவற்றின் மதிப்பு ரூ 65 கோடியாகும். இந்த யந்திர சாதனங்களைப் பெற அந்த நிறுவனங்களிடம் ஆர்டர் அளிக்கப்படுகிறது. யந்திர சாதனங்களைப்பெறுவதற்கு ஆகும் அன்னியச் செலாவணியில் ரூ. 40 கோடியை கே. எப். டபிள்யூ என்னும் மேற்கு ஜெர்மன் நிதி அமைப்பு அளிக்கும். ஆர்டர் அளித்ததிலிருந்து 45 மாதங்களில் யந்திர சாதனங்கள் மூன்று கட்டங்களில் சப்ளை செய்யப்படும்.

அதே நேரத்தில் தமிழக அரசினால் ஏற்று நடத்தப்படும் சதர்ன் ஸ்டிரக்சுரல்ஸ் என்னும் நிறுவனம் ரூ. 6.5 கோடி பெறுமான யந்திர சாதனங்களை அளிக்கும்.

## டெல்லியில் பேச்சு

நெய்வேலி திட்டத் தலைவர் யக்ஞேஸ்வரன் தமிழக அரசின் தலைமைச் செயலாளரும் சதர்ன் ஸ்டிரக்சுரல்ஸ் நிறுவனத்தின் தலைவருமான பி. சபாநாயகம் ஆகியோர் டெல்லியில் இரு மேற்கு ஜெர்மன் நிறுவனங்களின் பிரதிநிதிகளுடன் பேச்சு நடத்தி வருகின்றனர்,

நெய்வேலி திட்ட விஸ்தரிப்பு மேற்கொள்ளப்படுவதில் இருந்த பல சங்கடங்கள் சமாளிக்கப்பட்டுள்ளது குறித்து நெய்வேலி திட்ட அதிகாரிகள் மகிழ்ச்சி அடைந்துள்ளனர். தமிழ்நாட்டில் உள்ள மின்சாரப் பற்றாக்குறையைப் போக்க வேண்டுமென்றால் நெய்வேலிதிட்ட விஸ்தரிப்பை விரைவில் மேற்கொண்டாக வேண்டும் என்று உணர்ந்து மத்திய சக்தி அமைச்சகம் இத்திட்டத்துக்கு முழு ஆதரவு கொடுத்ததன் பலனாகவே இந்த சங்கடங்கள் சமாளிக்கப்பட்டன. இப்போது கடும் அன்னியச்செலாவணிபிரச்னை இருந்தபோதிலும் மத்திய அரசு இத் திட்டத்துக்குத் தேவையான அன்னியச்செலாவணியை ஒதுக்க முன்வந்துள்ளது என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

# கழுத்து அறுபட்டு பெண் சாவு

தாம்பரம், ஜூன் 13— கழுத்து அறுபட்டு 50 வயது பெண்மணி ஒருத்தி இறந்து கிடந்தாள்.

இந்த சம்பவம் நேற்று மதியம் தாம்பரத்தை அடுத்த பெருங்களத்தூருக்கு அருகே இருக்கும் மேம்பாலத்திற்கு அருகில் நடந்ததாகத் தெரிகிறது,

செய்தி அறிந்த தாம்பரம் போலீசார் சம்பவம் நடந்த இடத்திற்கு போலீஸ் மோப்ப நாயோடு விரைந்தனர். இறந்துகிடந்த பெண்ணின் அருகே ரத்தக்கரை படிந்த கத்தியொன்று கிடந்தது. போலீசார் கத்தியை கைப்பற்றினர்,

மோப்பநாய் சிறிதுதூரம் சென்று நின்றுவிட்டதாகத் தெரிகிறது. தாம்பரம் போலீசார் தீவிர புலன்விசாரணை செய்து வருகின்றனர்.

# சென்னை மார்க்கெட்

சென்னை, ஜூன் 13—

| | |
|---|---|
| **தங்கம்** | |
| (24 காரட்) சுத்த தங்கம் 10 கிராம் | ரூ. 560 00 |
| (22 காரட்) சில்லரை கிராம் | ரூ. 53 00 |
| **வெள்ளி** | |
| பார் வெள்ளி (1 கி. கி.) | ரூ. 1165 00 |
| உள்ளூர் | 1115 00 |
| (வெள்ளி 10 கிராம்) | ரூ. 11 75 |
| **மணிலாப்பயறு** | |
| கோடைகால பட்டாணி மொத்த விலை | 277 00 |
| **மணிலா எண்ணெய்** | |
| மொத்த விலை | ரூ. 750 00 |
| சில்லரை விலை | ரூ. 8 10 |
| **விளக்கெண்ணெய்** | |
| (100 கி. கி.) சென்னை கிடங்குடெலிவரி திருப்பத்தூர் மொத்த விலை | ரூ. 430 00 |
| சேலம் தாமரை அன்னம் மார்க் (16 05 கி. கி.) | ரூ. 74 00 |
| **தேங்காய் எண்ணெய்** | |
| (16.06 கி. கி.) டின் எம்.எஸ்.மார்க் | ரூ. 147 00 |
| முதல் | ரூ. 149 00 |
| **நல்லெண்ணெய்** | |
| 17 கி. கொண்ட டின் 1-க்கு (அக்மார்க் குருபரன் மார்க்) | ரூ. 146 00 |
| முதல் | ரூ. 148 00 |
| விற்பனை வரி தனி சில்லரை கிலோ 1-க்கு | ரூ. 9 50 |
| **கடலைப்பிண்ணாக்கு** | |
| 70கி.கி.கொண்ட மூட்டைக்கு 70 எக்ஸ்பெல்லர் | ரூ. 75 00 |
| **சர்க்கரை** | |
| பகிரங்க மார்க்கெட் விலை 100 கி. கி. | ரூ. 463 00 |
| முதல் | ரூ. 465 00 |

# தொழிலுடன் இணைந்த கல்வி: கவர்னர் யோசனை

சென்னை, ஜூன் 13— தொழிலுடன் இணைந்த கல்வித் திட்டம் மூலம் இளைஞர்களிடையே நம்பிக்கையை ஏற்படுத்த முடியும் என்று கவர்னர் ஷா கூறினார்.

கீழ்ப்பாக்கத்தில் சிந்தி பள்ளி ஒன்றைத் துவக்கி வைத்துப் பேசுகையில் கவர்னர் மேலும் கூறியதாவது:—

கல்வியைப் பரப்புவதற்காக தமிழ்நாடு ஏராளமான பணத்தைச் செலவிடுகிறது. ஆனால் செலவிடும் பணத்துக்கு தகுந்த பலன் கிடைப்பதில்லை. நவீன உலகின் சவால்களைச் சந்திக்கும் வகையில் நமது பள்ளிகளும் கல்லூரிகளும் இல்லை.

முறையான அடிப்படை இல்லாமல் வெறும் விஞ்ஞான தொழில் நுணுக்க கல்வி பயனற்றதாகத்தான் இருக்கும்.

சூழ்நிலைகளுக்கும் சுலோகங்களுக்கும் கட்டுப்படாமல் ஒரு மனிதனை உருவாக்குவதே கல்வியின் நோக்கமாக இருக்கவேண்டும் என்று கவர்னர் கூறினார்.

கல்லூரி முதல்வர் பால கிருஷ்ண ஜோஷி, இந்தப் பள்ளியின் பயிற்சி மொழி ஆங்கிலம் என்று தெரிவித்தார், தமிழ், இந்தி, சமஸ்கிருதம் ஆகியவைகளும் கற்றுத்தரப்படும் என்று அவர் கூறினார்.

சென்னையில் கல்வி வசதிக்காக சிந்தி வகுப்பினர் ரூ. 6 லட்சம் நிதி திரட்டியிருப்பதாக, பள்ளி நிர்வாகம் கமிட்டி தலைவர் கேசவதாஸ் ஜே. ஜாமானி தெரிவித்தார்.

# ஆட்டோ டிரைவர்கள் உண்ணாவிரதம் 5-ம் நாள்

சென்னை, ஜூன் 13— சென்னை ஆட்டோ டாக்சி டிரைவர்கள் பழைய காங்கிரசைச் சேர்ந்த ராஜசேகரன் தலைமையில் இன்று 5வது நாளாக தொடர் உண்ணாவிரதம் இருக்கின்றனர்.

டபிள்யூ. எஸ் இன்சுலெட்டர் தொழிற் சங்கத்தின் துணைத்தலைவர் ஜெ. ஜெயசீலன் இந்த உண்ணாவிரதத்தை துவக்கிவைத்தார்.

தமிழக அரசு புதிய ஆட்டோ ரிக்ஷாக்களுக்கு பர்மிட்வழங்குவதைஎதிர்த்து ஆட்டோ டாக்சி டிரைவர்கள் எழும்பூரில் உள்ள ஆர். டி. ஓ அலுவலகத்திற்கு எதிரே உண்ணாவிரதம் இருந்து வருகின்றனர்.

இன்று ராஜசேகரன், நடராஜன், குற்றாலம், வெங்கடேசன், நாணு ஆகியோர்கள் உண்ணாவிரதம் இருக்கின்றனர்.

2-ம் பத்தி தொடர்ச்சி

பரம் செய்து கொள்ளவில்லை.

ஆனால் இன்றுள்ள ஆட்சியில் விவசாயிகள் படும் கஷ்டங்கள் கொஞ்ச நஞ்சமல்ல. எந்த நன்மையும் செய்யாமல் அவர்கள் விளம்பரத்தின் மூலம் ஆட்சியை காப்பாற்றி கொள்ள நினைக்கிறார்கள்.

இதே கோவை மாவட்டத்தில் விவசாயிகள் சுட்டுத் தள்ளப்பட்டபோது நான் இங்கு ஓடிவந்து பாதிக்கப்பட்டவர்களைச் சந்தித்து ஆறுதல் கூறினேன்.

அவர்களுக்காக கண்ணீர் விட்டேன். இப்போதுபுதிதாக கட்சி ஆரம்பித்திருப்பவர் அப்போது என்னைக்கேலி செய்தார். அதைப்பற்றிக்கூட நான் கவலைப்படவில்லை. துப்பாக்கியில் குண்டுகள் வராமல் பூவா வரும்என்று கேட்டவராயிற்றே அவர்.

என்னை அனுமார் என்று கூட அவர் (எம். ஜி. ஆர்.) வர்ணித்தார் கேலிசெய்தார். தலைவர் காமராஜ் போன்ற தியாக சீலருக்கு, உத்தமருக்கு கறைபடியாக் கரம் கொண்ட தலைவருக்கு அனுமாராக இருந்து சேவை செய்வதில் நான் பெருமை படுகிறேன் என்று சிவாஜி கணேசன் பேசினார்.

# கொள்ளைக்காரனை எதிர்த்து போராடிய வீரப் பெண்

குவாலியர், ஜூன் 13—ஒரு கொள்ளைக்கூட்டத்தலைவனைப் பிடித்து நையப் புடைத்து சாகடித்த ஒரு பெண்ணின் துணிகரச்செயல்பற்றி தகவல் எட்டியுள்ளது. குவாலியர் பகுதியைச் சேர்ந்த சர்க்கா கிராமத்தில் இந்த சம்பவம் நடந்தது.

கல்யாண் என்ற துணிகர கொள்ளைக்காரன். ஒரு வீட்டில் புகுந்து கொள்ளையடித்து விட்டு திரும்புகையில் அந்த வீட்டில் இருந்த பெண் அவனுடைய இரண்டு கால்களையும் தாவிப் பிடித்து இழுத்து கீழே விழச் செய்தாள். அப்போது அங்கு வந்து சேர்ந்த அவளுடைய மூன்று மகன்களும் கம்பாலும், கட்டையாலும் அந்தக் கொள்ளையனைத் தாக்கினர்.

மயங்கி விழுந்த நிலையில் மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்ட அவன் அங்கு மரணமடைந்தான்.

ஏற்கெனவே கல்யாண் ஒரு கொள்ளை வழக்கில் சம்பந்தப்பட்டு, ஒரு போலீஸ்காரரைக் கொன்றுவிட்டதாகவும், இது சம்பந்தமாக 10 வருடம் கடுஞ் சிறைத் தண்டனை அடைந்தவன் என்றும் கூறப்படுகிறது. இதன் தொடர்பாக மேல்கோர்ட்டில் வழக்கு தொடர்ந்து ஜாமீனில்இருந்த போதுதான் மீண்டும் கொள்ளையடிக்க முயன்றிருக்கிறான் என்று போலீசார் கூறியுள்ளனர்.

## நாளைய நிகழ்ச்சி

ஸ்டேட் பாங்க ஆப் இந்தியா அலுவலர் சங்கம் சார்பிலான கடன் வழங்கும் சங்கம் துவக்க விழா: தலைமை: எச். எஸ். மஜூம்தார் துவக்கிவைப்பவர் அமைச்சர் மன்னை நாராயணசாமி. இடம்: தமிழ்நாடு கூட்டுறவு யூனியன் கட்டிடம் (வாலாஜா பிரிட்ஜ் அருகில்) மாலை 5 மணி)

# உங்கள் குரல்

## எடையில் மோசடி

ஐயா,

உணவுப் பொருள் விற்பனையை அரசாங்கமே மேற்கொண்டு ஆங்காங்கு கடைகள் திறக்கப்பட்டுள்ளன இது நல்லதே.

இந்தக் கடைகளை நடத்துகின்ற ஆட்கள் அந்த வியாபாரிகளுக்கு 'அப்பன்'களாக இருக்கிறார்கள். எடை போடும் போது பொருள் உள்ள தட்டை கையால் ஓர் அழுத்து அழுத்தி சரியாக நிறுத்து விட்டதைப் போன்ற ஓர் தோற்றத்தைக் காட்டி அவசரமாகப் பையினுள் கொட்டிவிடுகின்றனர். அதைத் தனியே கொண்டு போய் எடை போட்டுப்பார்த்தால் கிலோவுக்குப் பத்துகிராம் பொருளாவது குறைகிறது.

எடை போடும்போது சரியாகப் போடு என்று வாங்குபவர் கேட்டால், வீணாக சண்டைக்கு வருகிறார்கள். 'உனக்கே போட்டுக் கொண்டிருந்தால் மற்றவர்களுக்குப் போட வேண்டாமா?' என்று பேசி வாயடி அடிக்கிறார்கள். மரியாதைக் குறைவாகவும் நடந்துகொள்கிறார்கள்.

உணவுப் பொருள் வழங்கு துறை அதிகாரிகள் இத்தகைய அநியாயங்களைக் கண்காணித்து ஆவன செய்வார்களாக.

நாரா. இரா
சென்னை-24

★ ★ ★

## தண்ணீர் தண்ணீர்

ஐயா,

மந்திரிக்கழகு வரும்பொருள் உரைத்தல் என்பது முதுமொழி. பின்னால் வரக்கூடியதை முன்னதாகத் தெரிந்து செயலாற்ற வேண்டும்.

சென்னையின் குடிநீர்ப்பிரச்னை பல ஆண்டுகளாகத் தீராமலிருக்கும் ஒன்றாகும். இதற்காக ஆரம்பிக்கப்பட்ட வீராணம் திட்டம் 1973 லேயே தண்ணீரைக் கொண்டுவந்து விடப் போகிறது என்று பேசப்பட்டது இன்று வரை தண்ணீரைக் காணோம் வீராணம் திட்டம் வீணான திட்டம் என்று கூறப்படுகிறது.

மக்களின் முக்கியத் தேவைகளில் ஒன்றான தண்ணீர்ப் பிரச்னைக்கு நிரந்தரமான அடிப்படையில் தீர்வு காணாமல் "அதைச் செய்தோம் இதைச் செய்தோம்" என்று விரம்பரப் படுத்திக் கொள்வது நகைக்கத் தக்கது.

எறும்புகூட பஞ்சம் ஏற்படும் என்பதை அறிந்து பொருளை சேர்த்து வைத்துக்கொள்கிறது.

வீராணம் நீர், பாலாற்று நீர் திருவான்மியூர் நீர் என்றெல்லாம்பத்திரிகைகளில்வருகிறதே தவிர, குடங்களையும் பாத்திரங்களையும் தூக்கிக்கொண்டு தெருத் தெருவாய் மக்கள் அலையும் காட்சி பரிதாபமாக இருக்கிறது. பரிதாபம் என்ன? அடியேனே அப்படித்தான் அலைகிறேன்.

ஆட்சிப் பொறுப்பில் இருப்போரும், அதிகாரிகளும் இனியேனும் முன்கூட்டிய அறிவோடு நடந்து கொள்வார்களா?

'இறைமணி'
சென்னை - 24.

(குறிப்பு: முக்கியப் பிரச்னைகள் பற்றி "உங்கள் குரல்" பகுதிக்கு கடிதம் அனுப்பும் வாசகர்கள் சுருக்கமாக எழுதி அனுப்ப வேண்டும்.)

---

17-ந் தேதியிலிருந்து கோரிக்கை வாரம்

# இந்திராவின் ராஜிநாமா கோரி நாடு பூராவிலும் எதிர்க்கட்சி இயக்கம்

புதுடெல்லி, ஜூன் 13—பிரதமர் பதவியிலிருந்து இந்திரா ராஜிநாமா செய்ய வேண்டும் என்று கோரி நாடு பூராவிலும் வருகிற ஞாயிற்றுக்கிழமை (15-ந் தேதியிலிருந்து) "ராஜிநாமா கோரிக்கை வாரம்" நடத்தப் போவதாக எதிர்க்கட்சிகள் அறிவித்துள்ளன.

பிரதம மந்திரி ராஜிநாமா செய்யும்படி வற்புறுத்துவதற்காக 7 அம்ச செயல் திட்டம் வகுக்கப்பட்டுள்ளது

ஜெயப்பிரகாஷ் தலைமையிலான தேசிய இணைப்புக் குழுவின் அவசரக் கூட்டத்தை நடத்துமாறு கோரப்பட்டுள்ளது.

சட்ட நிபுணர்களின் சம்மேளனத்தின் கூட்டமும் நடைபெறும்.

## சட்ட நிபுணர் குழு பரிசீலனை

அலகாபாத் தீர்ப்பில் எழும் பிரச்னைகளின் சட்ட அம்சங்களைப் பற்றி விவாதிக்க முன்னாள் பிரதம நீதிபதி கே. சுப்பாராவ் தலைமையில் சட்ட நிபுணர்கள், வக்கீல்கள் சம்மேளனம் ஒன்று கூட்டப்படும்.

அலகாபாத் ஹைகோர்ட் தீர்ப்புக்குப் பிறகும் பிரதமர் பதவியில் இந்திரா நீடிப்பதை வலது கம்யூனிஸ்டுகட்சி நீங்கலாக மற்ற எதிர்க்கட்சிகள் கடுமையாக ஆட்சேபித்துள்ளன.

தீர்ப்பு வெளியான உடனேயே அதாவது காலை 10-30 மணிக்கே பிரதமர் பதவியிலிருந்து இந்திரா ராஜிநாமா செய்திருக்கவேண்டும் என்று பழைய காங்கிரஸ், ஜனசங்கம், இந்திய மக்கள் கட்சி, சோஷலிஸ்டு ஆகிய கட்சிகளின் தலைவர்கள் கூடி கருத்து தெரிவித்தனர்.

1969 பாணியில் போலி இயக்கம் நடக்கிறது என்று இந்திய மக்கள் கட்சி காரியதரிசி பிலுமோடி கூறினர்.

ஆனால், அலகாபாத் ஹைகோர்ட் தீர்ப்பைப் பற்றி எந்த அபிப்பிராயமும் கூற கம்யூனிஸ்ட் தலைவர், பூபேஷ் குப்தா மறுத்துவிட்டார்.

நேற்று காலை பழைய காங்கிரஸிலிருந்து ராஜிநாமா செய்த முன்னாள் குஜராத் முதல் மந்திரி ஹிதேந்திர தேசாயும் அபிப்ராயம் கூற மறுத்துவிட்டார்.

பிரதம மந்திரி தொடர்ந்து பதவியை வகிப்பதற்கு தார்மிக நியாயம் ஒன்றும் கிடையாது என்று ஜனசங்க பிரதிநிதி யொருவர் கூறினர்.

## முன்னாள் பிரதம நீதிபதி கருத்து

அலகாபாத் ஹைகோர்ட் தீர்ப்பைப் பற்றி முன்னாள் பிரதம நீதிபதி ஹிதயதுல்லா கருத்து கூறுகையில் தேர்தல் செல்லாதென்ற உத்தரவு அமலை கோர்ட்டு நிறுத்தி வைத்திருப்பதால், அத்தடை நீடிக்கும் வரையில் அல்லது சுப்ரீம் கோர்ட்டு மேற்கொண்டு இடைக்காலத் தடை நீடிக்கும் வரையில் இந்திரா காந்தி பிரதம மந்திரி பதவியில் இருந்து வரலாம் என்று கூறினர்.

கோர்ட் தடை உத்தரவு இருந்த போதிலும், பிரதமர் பதவியிலிருந்து இந்திரா காந்தி விலகுவதைத் தடுப்பதற்கு தடை ஏதும் இல்லை என்றும் அவர் கூறினர்.

## மொரார்ஜி தேசாய் கோரிக்கை

அலஹாபாத் ஹைகோட்டின் தீர்ப்பையொட்டி பிரதம மந்திரி இந்திரா காந்தி உடனடியாக ராஜிநாமா செய்ய வேண்டும் என்று பழைய காங்கிரஸ்தலைவர் மொரார்ஜி தேசாய் கோரினர்.

தாம் எதிர்பார்த்தவாறே தீர்ப்பும் இருந்ததாக அவர் கூறினர். இந்திரா காந்தியின் மீதான வழக்கு ஆதார பூர்வமானது என்றும் நீதித்துறையின் சீரிய பாரம்பரியத்தை தீர்ப்பு நிலைநாட்டியுள்ளதாகவும் தேசாய் குறிப்பிட்டார்.

கோர்ட் 20 தினங்கள் அவகாசம் கொடுத்த போதிலும் இந்திராகாந்தி உடனடியாக விலக வேண்டும் என்றும், வேறு ஒருவரை பிரதமராக நியமிக்க வேண்டும் என்றும் அவர் சொன்னார்.

## மது தந்தவாதே

சோஷலிஸ்ட் கட்சி எம்.பி. மது தந்தவாதே அலஹாபாத் ஹைகோர்ட் தீர்ப்பை வரவேற்றார். கோர்ட் தீர்ப்புக்கு சர்க்கார் பணியவேண்டும் என்றும், இந்திரா காந்தி பிரதம மந்திரி பதவியை உடனடியாகராஜிநாமாச்செய்ய வேண்டும் என்றும் அவர் புனாவில் கூறினர்.

இந்திரா காந்தி உடனடியாக விலக வேண்டும் என்று சோஷலிஸ்ட் கட்சி தலைவர் ஜார்ஜ் பெர்னாண்டஸ் கோரினர்,

## முகமது கோயா

இந்திய நீதித்துறையின் சுதந்திரத்தை இத்தீர்ப்பு காட்டுகிறது என்று இந்திய யூனியன் முஸ்லிம்லீக் பொதுக் காரியதர்சி சி, எச். முகமது கோயா கூறினர், இது சம்பந்தமாக சுப்ரீம் கோர்ட்டின் முடிவை எதிர்பார்ப்போம் என்றார் அவர்.

ஒரு தேசிய அரசை உருவாக்குவதற்கு இப்போது சாத்யக்கூறு உள்ளதாக, அகில இந்திய ஜனசங்கத்தின் நிர்வாகக் காரியதரிசி நானாஜி தேஷ்முக் கருத்து தெரிவித்துள்ளார்.

"ஓர் ஒளிமயமான எதிர்காலம் பற்றி மக்களின் உள்ளங்களில் நம்பிக்கை ஏற்படுத்துவதற்கு இதுவே சரியான தருணமாகும்" என்றும் அவர் குறிப்பிட்டார்.

## மதுலிமாயி

"இந்திரா ராஜிநாமா செய்வது மிகமிக அவசியமாகும்" என்று சோஷலிஸ்ட் எம், பி. மதுலிமாயி வற்புறுத்தி இருக்கிறார்.

சுப்ரீம் கோர்ட்டில் தாக்கல் செய்யப்படப்போகும் எந்த வித அப்பீலைப் பொறுத்தும் பிரதமர் முடிவு எடுக்கக் கூடாது என்றும் அவர் கூறியுள்ளார்.

# கருத்து கூற கருணாநிதி மறுப்பு

தஞ்சை, ஜூன் 13—பிரதமர் இந்திரா காந்தியின் தேர்தல் செல்லாது என்று தீர்ப்பு கூறப்பட்டுள்ளது குறித்து கருத்து ஏதும் கூறுவதற்குத் தமிழக முதல்வர் கருணாநிதி மறுத்துவிட்டார்.

# இந்திரா விலக மார்க்சிஸ்ட் கோரிக்கை

கல்கத்தா, ஜூன் 13—பிரதமர் இந்திரா காந்தி தமது பதவியை உடனடியாக ராஜிநாமா செய்ய வேண்டும் என்று, இடது கம்யூனிஸ்டு கட்சியின் மத்யகுழு (பொலிட் பீரோ) கோரி உள்ளது.

"அலகாபாத் ஹைகோர்ட்டின் இந்தத் தீர்ப்புக்குப் பின்னர், பிரதம மந்திரியாக இந்திராகாந்தி தொடர்ந் நீடிப்பது அவமானமாகும்' என்று இந்தக்குழு குறிப்பிட்டுள்ளது.

தேர்தலில் வெற்றி பெறுவதற்காக, அரசு அதிகாரங்களை இந்திரா பயன் படுத்தினர் என்று அது கண்டனம் கூறியது. தேர்தலையே அவர் ஒரு கேலிக்கூத்து ஆக்கிவிட்டார் என்றும் அது குறிப்பிட்டது.

---

# இன்றைய சினிமா

சென்னை
ராம்: யாருக்கும் வெட்கமில்லை
நியூ எல்பின்ஸ்டன்
RAJAHAMSAM
நேஷனல்
மனோன்மணி
ஈராஸ்: மாயாபஜார்
குரோம்பேட்டை
வெற்றி:
யாருக்கும் வெட்கமில்லை
பல்லாவரம்
லட்சுமி: வாழ்க்கை ரகசியம்
தாம்பரம்
எம். ஆர். தியேட்டர்:
எல்லோரும் நல்லவரே
நேஷனல்
நினைத்ததை முடிப்பவன்
சித்ரா: தங்கத்திலே வைரம்
கொளத்தூர்
ஸ்ரீ குமரன்
கஸ்தூரிவிஜயம்

# ஆளுக்கு ஒரு ஆட்டோரிக்ஷா: ஆசைத்தம்பி வழங்கினர்

சென்னை, ஜூன் 13—ஓட்டுனர்களுக்கே ஊர்தியைச் சொந்தமாக்கும் திட்டத்தின் கீழ் 40 பேருக்கு ஆட்டோ ரிக்ஷாக்களை சென்னை ஆட்டோ ரிக்ஷா கூட்டுறவு சங்கத் தலைவர் ஏ. வி. பி. ஆசைத்தம்பி வழங்கினர்.

விழாவிற்கு சங்கத் துணைத் தலைவர் சு. வ, நல்லையா தலைமை வகித்தார். செயலாளர் எட்வின் அருள்சாம்ராஜ் நன்றி கூறினர்.

---

# இந்திராவின் வீட்டிற்கு மக்கள் ஊர்வலம்: பதவி நீடிக்க கோரிக்கை

புதுடெல்லி, ஜூன் 13—பிரதமர் இந்திரா காந்தி பார்லிமெண்ட் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டது செல்லாது என்று அலகாபாத் ஹைகோர்ட் தீர்ப்பளித்து உள்ளது அல்லவா?

என்றாலும் பிரதமர் இந்திரா தமது பதவியில் நீடிக்க வேண்டும் என்று 150க்கும் மேற்பட்ட பார்லிமெண்ட் உறுப்பினர்களும் பொது மக்களும் இந்திராவிடம் கேட்டுக்கொண்டனர்.

தமக்கு நேரில் வந்து மீண்டும் ஆதரவு தெரிவித்தவர்களின் உணர்ச்சியைப் பாராட்டுவதாக இந்திரா காந்தி கூறினர்.

தேர்தல் மனு விஷயத்தில் இறுதி முடிவு எடுக்கும் பொறுப்பு சுப்ரீம்கோர்ட்டுடையதே என்றும் அது பற்றிய வழக்காடல் நீடிக்கும் என்றும் பிரதமர் இந்திரா காந்தி கூறினர்.

பின்னர், அவர் தம்முடைய இல்லத்தின் எதிரில் கூடியிருந்த ஆயிரக்கணக்கான மக்கள் முன்பு தோன்றி அவர்களுடைய ஆதரவுக்கு நன்றி தெரிவித்துக்கொண்டார்.

கூடியிருந்த மக்களிடையே பிரதமர் பேசுகையில், மக்களுக்குத் தாம் தொடர்ந்து சேவை செய்துவரப் போவதாகக் கூறினர்.

## சவாலை சமாளிப்பேன்: இந்திரா உறுதி

மக்களின் நம்பிக்கையைப் பெற்று வறுமை ஒழிப்பு புது சமுதாய அமைப்பு ஆகிய லட்சியத்தை அடைவதற்காகத் தாம் தொடர்ந்து பாடுபட்டு வரப்போவதாகவும் அவர் சொன்னர்.

"இதற்கு முன்னால் பல சவால்களை நாம் சமாளித்திருக்கிறோம். அவற்றை இனியும் தொடர்ந்து சமாளித்து வருவோம்" என்றும் பிரதமர் கூறினர்.

இந்திராவைச் சந்தித்த எம்.பிக்கள், அதற்கு முன்னால் அ.இ.கா.க. அலுவலகத்தில் கூடி விவாதித்தனர். அலகாபாத்தீர்ப்பை எதிர்த்து சுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் தாக்கல் செய்யப்போவதால் பதவியில் நீடிக்குமாறு இந்திரா காந்தியைக் கேட்டுக் கொள்வதென்று அவர்கள் முடிவு செய்தனர்.

அ. இ. கா. க. அலுவலகத்திலிருந்து அவர்கள் பிரதமர் வீட்டிற்கு ஊர்வலமாகப் போய், தங்கள் கையெழுத்துக்களுடன் கூடிய ஆதரவு உறுதிமொழி கடிதத்தை கொடுத்தனர்.

## "இந்திரா நீடிப்பார்"

எம், பி.க்கள்கூட்டத்துக்கு புதுகாங்கிரஸ்தலைவர் டி. கே. பருவா தலைமை வகித்தார். நாட்டை பல்வேறு சவால்கள் எதிர் நோக்கியுள்ள இந்தச் சூழ்நிலையில் இந்திரா காந்தியின் தலைமை இன்றியமையாததாகும் என்றார் அவர்.

வெளி விவகார மந்திரி ஒய். பி. சவான் பேசுகையில் இந்திரா காந்தி பிரதமர் மட்டுமல்ல, அதைவிட இன்னும் பெரிய ஸ்தானத்தை வகிப்பவர் என்றார். அவர் பதவியில் நீடிப்பது ஒருதேசிய அவசியமாகும் என்றும் சவான் கூறினர்,

விவசாய மந்திரி ஜகஜீவன் ராம் பேசுகையில், கட்சிக்கும் நாட்டுக்கும இந்திரா காந்தி தலைவராகத் தொடர்ந்து நீடித்து வருவார் என்றார்.

தேசத்துக்கும் கட்சிக்கும் இந்திரா காந்தி தொடர்ந்து வழிகாட்டி வருவார் என்று கப்பல் போக்குவரத்து மந்திரி உமாசங்கர் தீட்சித் கூறினர்.

## இந்திராவுக்கு கடிதம்

புது காங்கிரசின் மத்திய பார்லிமெண்டரி போர்டு நேற்று கூடியது. பிரதமராக நீடித்து நாட்டுக்குத் தொடர்ந்து வழிகாட்டுமாறு இந்திரா காந்தியைக் கேட்டுக் கொண்டது.

இந்தக் கோரிக்கை அடங்கிய ஒரு கடிதத்தை புது காங்கிரஸ தலைவர் டி. கே. பருவா இந்திரா காந்திக்கு அனுப்பி வைத்தார்.

இந்தக் கூட்டம் நேற்று மாலை முக்கால் மணி நேரம் நடந்தது. இக்கூட்டத்தில் இந்திரா காந்தி கலந்து கொள்ளவில்லை. பருவா, ஜகஜீவன்ராம், ஒய். பி. சவான், உமாசங்கர் தீட்சித் எஸ். எஸ். ரே ஆகியோர் கலந்துகொண்டனர், கூட்டம் நடந்த உடனேயேமேற்கூறிய கடிதத்தை இந்திரா காந்திக்கு பருவா அனுப்பிவைத்தார்.

## மந்திரிகள் அறிக்கை

இந்திரா காந்தி பிரதம மந்திரியாக நீடிக்கிறார் என்று இந்திரா காந்தி மந்திரி சபையின் மூத்த மந்திரிகளும் புது காங்கிரஸ் தலைவர்

4-ம் பக்கம் பார்க்க

---

# ரூ. 22 லட்சம் கடத்தல் பொருள் பிடிபட்டது

பம்பாய், ஜூன் 13—பம்பாயில் சுங்க இலாகா அதிகாரிகள் சுமார் 22 லட்சரூபாய் மதிப்புள்ள கடத்தல்பொருட்களை கைப்பற்றினர்கள்.

பம்பாய் நகரில் பல இடங்களில் சுங்க இலாகா அதிகாரிகள் திடீர் சோதனை நடத்தினர்கள்.

இந்த திடீர் சோதனைமூலம் 14 லட்சத்து 75 ஆயிரம் மதிப்புள்ள கள்ளக்கடத்தல் துணிகள், கடிகாரங்களைக் கைப்பற்றினர்கள்.

வடக்கு பம்பாயில் வெஸ்ஸீனில் கரை ஓரக் காவல் படையினர் ஒரு நாட்டுப்படகில் இருந்து சுமார் 7 லட்சரூபாய் மதிப்புள்ள கடத்தல் பொருள்களைக் கைப்பற்றினர்கள்.

# புதுவையில் ரூ. 50 லட்சம் அன்னியகரன்சி பறிமுதல்

புதுவை, ஜூன், 13—புதுவையில் ஒருவர் வீட்டிலிருந்து சுமார் 50 லட்ச ரூபாய் மதிப்புள்ள வெளிநாட்டு ரூபாய் நோட்டுகளை அதிகாரிகள் கைப்பற்றினர்கள்.

மத்திய எக்சைஸ் உதவி கலெக்டர் வி. எஸ். ராமகிருஷ்ணன் உத்தரவின்பேரில் எக்சைஸ் சூபரிண்டெண்ட் பஞ்சநதன் அந்த நோட்டுகளைக் கைப்பற்றினர்,

மேற்கொண்டு புலன் விசாரணை நடந்து வருகிறது.

---

அதிகாரி சாட்சியம்:

# "அரிசி பேர ஊழலில் மந்திரி ப. உ. ச.வுக்கு தொடர்பு இல்லை"

சென்னை, ஜூன் 13—ரூ. 1½ கோடி அரிசி பேர ஊழல் புகார் குறித்து நடைபெறும் விசாரணையில் சாட்சிகள் விசாரணை நேற்றுத் தொடங்கியது. முதல் சாட்சியாக, உணவு இலாகா செயலாளராக இருந்த ராமசந்திரன் சாட்சியம் அளித்தார். 'அரிசி விற்பனை பற்றிய பேரத்தில் அமைச்சர் ப. உ. சண்முகத்துக்குத் தொடர்பு இல்லை' என்று அவர் கூறினர்.

அவரிடம் அரசாங்க வக்கீல் ஜி. ராமசாமி கேட்ட கேள்விகளுக்குப் பதில் அளித்து ராமச்சந்தர் கூறியதாவது:—

"நான் 1970 பிப்ரவரி முதல் 73 நவம்பர் வரை உணவுத்துறைச் செயலாளராக இருந்தேன்.

இப்பொழுது பொதுப் பணித்துறைச் செயலாளராக இருக்கிறேன்.

1969 மே மாதம் முதல் 72 அக்டோபர் வரை ப. உ. சண்முகம் உணவு அமைச்சராக இருந்தார்.

1970-ல் "சம்பா சீசன்" தோன்றியபோது, தஞ்சையில் லெவி கொள்முதல் செய்ய முடிவு எடுக்கப்பட்டது. லெவிக்காக தஞ்சாவூர் மார்க்கெட்டிங் பெடரேஷன் 80 ஆயிரம் டன் நெல்லைக் கொள்முதல்செய்து அதில் 50 சதவிகிதம் லெவிக்காக அரசாங்கத்திடம் கொடுத்துவிட்டது

## "மத்திய அரசு பதில் இல்லை"

பாக்கியிருந்த கையிருப்பை வெளி மார்க்கெட்டில் விற்பதற்கு அரசை அவர்கள் அணுகினர்கள். லெவியில் ஏற்பட்ட நஷ்டத்தைத் தவிர்த்து இந்தக்கையிருப்பை விற்க வேண்டும் என்றார்கள். இதற்கு மத்திய அரசை அணுகினோம் மத்திய அரசிடமிருந்து பதில் வரவில்லை. ஆகவே அந்தக் கையிருப்பை கேரளத்திற்கு ஏற்றுமதி செய்ய முடிவு எடுக்கப்பட்டது. அப்போது அடுத்த ஆண்டு சம்பா சீசனும் வரத் தொடங்கிவிட்டது. ஏற்றுமதி செய்வதைத்தவிர, நல்ல விலை கிடைக்க வேறுவழி இல்லை. ஆகவே கலெக்டர் மூலம் டெண்டர் கோரப்பட்டது. முதல் டெண்டரில் நெல்லுக்கு நல்லவிலைவந்தது. அரிசிக்கு சரியான விலை வரவில்லை. ஆகவே இரண்டாவது டெண்டர்விடப்பட்டது. இதிலும் குறைந்த விலையே வந்தது. இதன் பிறகு 'லிமிடெட் டெண்டர்' கோரப்பட்டது. இதுவும் சரியாக வராததால் டெண்டருக்கு அப்பாற்பட்டு விற்க முடிவு எடுக்கப்பட்டது.

தாண்டவராயன் தஞ்சைக் கலெக்டருக்கு 6—3—71-ல் ஒரு தந்தி கொடுத்தார், ஒரு டன் அரிசி 1,081 ரூபாய் விதம் எல்லா அரிசியையும் எடுத்துக்கொள்வதாக அந்த தந்தியில் குறிப்பிட்டிருந்தார்,

9—3—71-ல் நெல் டன் ஒன்றுக்கு 800 ரூபாய் 50 பைசா வீதம் சில அளவுகளை எடுத்துக்கொள்வதாக ஒரு தந்தி கொடுத்தார். மேற்கொண்டும் இதை வாங்குவதற்கு பலர் முன்வந்தனர்.

அதையொட்டி தாண்டவராயன் ஒருடன் 1,111 ரூபாய் 25 பைசாவுக்கு எடுக்கச் சம்மதித்தார், இதைத் தவிர வேறு ஒருவரும் வாங்குவதற்கு முன்வந்தார்.

சக்திகணபதி என்பவர் 1,120 ரூபாய்க்கு எடுத்துக் கொள்வதாகத் தெரிவித்தார். இதே தொகைக்கு வேறுஒருவரும் தந்தி கொடுத்திருந்தார்.

இவ்வாறு அவர் கூறினர்: தந்தி, கடித விவரங்களையும் கோர்ட்டில் அவர் காட்டினர்.

## 'ப. உ. சவுக்கு தொடர்பு இல்லை'

பின்னர் அவரிடம் அரசு தரப்பு வக்கீல் ஜி. ராமசாமி, "இந்த அரிசி பேரத்தில் முன்பு உணவு அமைச்சராக இருந்த ப. உ. சண்முகம் எந்த நேரத்திலாவது எந்த நிலையிலாவது தாண்டவராயனுக்கோ அல்லது வேறு யாருக்காவது கொடுக்கலாம் என்று விருப்பம் இருப்பதாக உங்களுக்கு எடுத்துச்சொல்லியிருக்கிறாரா" என்று கேட்டார்.

அதற்கு ராமசந்தர் பதில் அளிக்கையில், "இல்லை இந்த அரிசிபேர நடவடிக்கைகள் குறித்து நான் தான் அவரிடம் சென்று பலமுறை விவாதித்திருக்கிறேன், அரிசி பேர விற்பனையில் அவர் யார் மீதும் அவர் எந்தவித அக்கறையும் காட்டவில்லை" என்று பதில் அளித்தார்.

தொடர்ந்து அவர் சாட்சியம் அளிக்கையில், 68-69-ம் ஆண்டுகளில் தமிழ்நாட்டிலிருந்த உணவுக் கொள்கையையும் கட்டாய ரேஷன் அமுலில் இருந்ததையும் விவரித்தார்.

---

# தொழிலாளர் நலன் காக்க சென்னையில் 21-ந் தேதி மாநாடு

சென்னை, ஜூன் 13— தொழிலாளர்களின் உரிமைகளைப்பாதுகாப்பதற்கான வழிகளை ஆராய்வதற்காக சென்னை கோகலே மண்டபத்தில் இந்த மாதம் 21-ந் தேதி ஒரு சிறப்பு மாநாடு நடைபெறும்.

குசேலர், ராகவானந்தம், ஏ. சுப்பிரமணியம், பி. சிதம்பரம், கே. டி. கே. தங்கமணி முதலானோர் இந்த மாநாட்டில் பேசுவார்கள்.

சென்னையில் நேற்று முன்தினம் மாலை நடந்த தொழிற்சங்க பிரதிநிதிகள் கூட்டத்தில் இது பற்றி முடிவு மேற்கொள்ளப்பட்டது.

ஏ. எஸ். கே. அய்யங்காரை தலைவராகவும் ஏ. எம். கோபு முதலானோரை செயலாளர்களாகவும் கொண்ட ஒரு ஆயத்த குழு அமைக்கப்பட்டுள்ளது.

தொழிலாளர்களின் நலனை பாதுகாப்பது, பொதுத் துறையைகாப்பது, தொழிலாளர்களின் நியாயமான கோரிக்கைகளை நிறைவேற்றச் செய்வது ஆகியவைகளே இந்தக் மாநாட்டின் நோக்கமாகும்.

# இந்திய -- ருமேனிய கூட்டுறவு திட்டம்

புதுடெல்லி, ஜூன் 13—விவசாயம், உணவுத் தொழில் நீர் நிர்வாகம் துறையில் இந்திய–ருமேனிய கூட்டுறவு திட்டம் ஒன்றின் முன்குறிப்பு நேற்று புதுடெல்லியில் கையெழுத்தானது.

இந்த முன்குறிப்பு இரண்டு ஆண்டுகளுக்கு அமுலில் இருக்கும். இரு நாடுகளிலும், விசேஷ விஞ்ஞானிகள், விசேஷ நிபுணர்கள் பெற்றுவர அனுப்பப்பட்டுத் தருவது, வருகை பரிமாற்றம் முதலியவற்றுக்கு இக்குறிப்பு வகை செய்கிறது. இந்தியாவில் வேளாண்மை உற்பத்தி, பருத்தி உற்பத்தி, பட்டுப் பூச்சி வளர்ப்பு, உப்பு, உவர் நிலங்களை பண்படுத்துவது மண்பாண்ட தொழில் நுட்பம் முதலியவற்றை ருமேனிய விஞ்ஞானிகள் ஆய்வர். ருமேனியாவில் சூரியகாந்தி, பீருட், திராட்சை உற்பத்தி செய்வது சம்பந்தமான தொழில் நுட்பங்களை இந்திய விஞ்ஞானிகள் ஆராய்வர். தவிர, காய்கறிகள், பழங்கள் அறுவடைக்குப் பிறகு பிந்திய தொழில் நுட்பம் பற்றியும், காய்கறி பழங்களை பக்குவம் செய்தல், சேமித்தல் பற்றியும், மருந்துச் செடிகள் பற்றியும், உப்பு, உவர் நிலங்களை பயன்படுத்துவது பற்றியும் அவர்கள் ஆராய்வர்.

இரு நாடுகளின் ஆராய்ச்சி விஞ்ஞானிகளும் சுகாதாரத் தொழில் நுட்ப மாதிரி விதைகளை பரிமாறிக்கொள்ளும்.

---

# ஓடும் ரெயிலில் ரூ. 6,000 நகைகள் திருட்டு

செங்கற்பட்டு, ஜூன் 13—நாகூரிலிருந்து சென்னைக்கு ராமேசுவரம் எக்ஸ்பிரசில் வந்து கொண்டிருந்த குடும்பத்தாரின் டிரங்கு களவு போய்விட்டது. அதில் ரூ. 6 ஆயிரம் மதிப்புள்ள நெக்லஸ் சங்கிலி, வளையல்கள் போன்ற 7 நகைகளும் 4 விலையுயர்ந்த புடவைகளும் இருந்தன.

புரசைவாக்கத்தை சேர்ந்த திருமதி சித்ரா சுவாமிநாதன் விழுப்புரத்துக்கும், திண்டிவனத்துக்குமிடையில் தன் பெட்டி காணமற் போய்விட்டதை அறிந்ததாக எழும்பூர் ரெயில்வே போலீசில் புகார் செய்தார்.

செங்கற்பட்டு ரெயில்வே போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர் வி. சண்முகம்புலன்விசாரணை செய்து வருகிறார்,

# குஜராத் தேர்தலில் முன்னாள் முதல்வர் சிமன்பாய்படேல்தோல்வி

**ஆமதாபாத், ஜூன் 13— தனிக் கட்சி அமைத்து குஜராத் தேர்தலில் போட்டியிட்ட முன்னாள் முதல்வர் சிமன்பாய் படேல் 13 ஆயிரம் ஓட்டு வித்தியாசத்தில் பழைய காங்கிரஸ் வேட்பாளரிடம் படுதோல்வி யடைந்தார்.**

சிமன்பாய்படேல் பாவி-ஜேட்பூர் தொகுதியில் போட்டியிட்டார், இவரை பழையகாங்கிரஸ் சார்பில் போட்டியிட்ட இளம் ஆதி வாசியான மோகன் ராத்வா 13 ஆயிரம் ஓட்டு வித்யா சத்தில் தோற்கடித்தார். இத் தொகுதியில் மொத்தம்4பேர் போட்டியிட்டனர்.

சிமன்பாய் படேல் முன்னர் புது காங்கிரஸில் இருந்தார். அவர் முதல்வராக இருந்த போதுதான் மாணவர்கள் போராட்டம் நடத்தி அவருடைய ஆட்சியை வெளி யேற்றினர். அவர் பின்னர் புது காங்கிரஸிலிருந்து வெளி யேறி கிசான் மஜ்தூர் மக்கள் கட்சியென்னும் புதிய கட்சியை அமைத்தார்.

அக்கட்சியின் தலைவரான சிமன்பாய் படேல் இப்போ தைய தேர்தலில் தோற்ற தானது அக்கட்சிக்குப் பெரிய அடியாகும்.

### பரோடா மகாராஜா தோல்வி

இத்தேர்தலில் புது காங்கிரஸ் சார்பில் போட்டியிட்ட முன்னாள் பரோடா மகாராஜா பத்த சிங் ராவ் கெய்க்வாட் தோல்வியுற்றார். இவர் புது காங்கிரஸ் கட்சிக்குப் பெரிய அடியாகும். குஜராத் புது காங்கிரஸ் செயலாளர் பிர போத் ராவல், புதுகாங்கிரஸ் முன்னாள் மந்திரி தார்க்கா பாய் படேல் ஆகியோரும் தோல்வியுற்றனர்.

அதே நேரத்தில் குஜராத் புது காங்கிரஸ் கட்சித் தலைவ ரான சோனாங்கி 8000 ஓட்டு வித்தியாசத்தில் வெற்றி பெற்றார். மகன்பாய் பாரோத், ஜஸ்வந்த்மேத்தா, சனத்மேத்தா ஆகிய புது காங்கிரஸ் முன்னாள் மந்திரி களும் வெற்றிபெற்றனர்.

### சபாநாயகர் வெற்றி

கலைக்கப்பட்ட குஜராத் சட்டசபை சபாநாயகர் லெயுவா தேர்தலில் வெற்றி பெற்றார்.

குஜராத் பழையகாங்கிரஸ் கட்சி துணைத்தலைவரான பய் லாபாய் காண்ட்ராக்டர் வெற்றிபெற்றுள்ளார். அவர் ஜனதா முன்னணி சார்பில் போட்டியிட்டு புதுகாங்கிரஸ் வேட்பாளரை 14 ஆயிரம் ஓட்டு வித்தியாசத்தில் தோற் கடித்தார்.

### மாணவர் தலைவர் வெற்றி

குஜராத்தில்முன்னர்பெரும் போராட்டத்தை நடத்திய நவநிர்மாண சமதி என்னும் மாணவர் அமைப்பின் தலைவரான ராஜ் குமார் குப்தா வெற்றி பெற் றார். அவரிடம் தோல்வி யுற்ற பிரபோத் ராவல் மாநில புது காங்கிரஸ் கட்சி செயலாளராக இருப்பவர்,

### பழைய காங்கிரஸ் தலைவர் வெற்றி

குஜராத் பழையகாங்கிரஸ் கட்சி தலைவரான பாபுபாய் படேல் சபர்மதி தொகுதியில் 16 ஆயிரம் ஓட்டு வித்யாசத் தில் ஜெயித்தார்.

ஜனதா முன்னணி ஆட்சி அமைத்தால் இவர் முதல்வர் ஆகலாம் என்று கூறப்படு கிறது.

மாநில குடியரசுகட்சித்தலை வர் மக்வானவும் முஸலிம் லீக் தலைவர் என். ஜி. குரேஷி யும் தேர்தலில் தோற்றனர்.

### ப. காங்கிரஸ் செயலாளர் தோல்வி

அகில இந்திய பழைய காங் கிரஸ் கட்சி செயலாளரான மனுபாய் படேல் புது காங் கிரஸ வேட்பாளரிடம் தோற் றார்.

---

## இந்திராவின் வீட்டுக்கு...

3-ம் பக்கத் தொடர்ச்சி

பருவாவும் இன்று அறிக்கை யொன்றில் கூறினர். கட்சி முழுவதும் இந்திரா காந்தி யின் தலைமையில் முழு நம் பிக்கையும் விசுவாசமும் கொண்டிருப்பதாக அறிக்கை கூறியது.

அலஹாபாத் ஹைகோர்ட் தீர்ப்பை ஆட்சேபித்து பிரதம மந்திரி சுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் தாக்கல் செய்வார் என்றும், சுப்ரீம் கோர்ட் தீர்ப்பே இறுதியானது என் றும் அறிக்கை குறிப்பிட்டது. நாட்டின் ஒருமைப்பாடு, ஸ்திரத்தன்மை, முன்னேற்றம் ஆகியவற்றுக்கு இந்திரா காந்தியின் தலைமை அத்யா வசியம் என்று அவர்கள் தங் களது அறிக்கையில் கருத்து தெரிவித்தனர்.

ஜகஜீவன்ராம், சவான், உமாசங்கர் திட்சித், டி.கே. பருவா, பரமானந்தரெட்டி, எச் ஆர் கோகலே டாக்டர் சங்கர் தயாள்சர்மா ஆகி யோர் அறிக்கையில் கையெ ழுத்திட்டிருந்தனர்.

### "இந்திரா ராஜிநாமா செய்ய மாட்டார்"

ஹைகோர்ட் உத்தரவு 20 தினங்களுக்குநிறுத்திவைக்கப் பட்டிருப்பதால் இந்திரா காந்தி பிரதம மந்திரியாக நீடிப்பார் என்று, பிரதம மந்திரி காரியாலய அதிகாரி ஒருவர் அறிவித்தார்.

தற்சமயம் அவர் ராஜிநா மாச் செய்யும் பிரச்னையில்லை. ஹைகோர்ட் தீர்ப்பை ஆட்சேபித்து அப்பீல் செய்ய அவர் முடிவு செய்திருக்கி றார். சட்ட நிபுணர்களுடன் ஆலோசனை நடக்கிறது என்று அதிகாரி மேலும் தெரி வித்தார், சர்க்காரின் பணி கள் வழக்கம் போல் நீடிக்கும் என்றார். விரைவில் அப்பீல் தாக்கல் செய்யப்படும் என்று அவர் சொன்னார்.

### முதல்வர்கள் அறிக்கை

புதுடில்லி, ஜூன் 13-எட்டு ராஜ்ய முதன் மந்திரிகள் விடுத்துள்ள கூட்டறிக்கையில் நாட்டின் முன்னேற்றத்தை யும் ஸ்திரத் தன்மையையும் இந்திரா காந்தியின் நம்பக மான தலைமையின் கீழ் தொடர்ந்து ஒப்படைக்கப் பட்டு வரவேண்டும் என்று கூறியுள்ளனர்.

இந்திரா காந்தி சுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் செய்து கொள்ளப்போகிறார். அதன் தீர்ப்பே இறுதியானதாயிருக் கும் என்றும் அவர்கள் இந்த அறிக்கையில் குறிப்பிட்டுள் ளனர். பிரதமரிடம் தங்க ளுக்குள்ள நம்பிக்கையையும் அவர்கள் ஊர்ஜிதம் செய்கின் றனர்.

பன்ஸிலால் (ஹரியானு), ஸெயில் சிங் (பஞ்சாப்), பி. ஸி. சேத்தி (ம. பி.) ஜகந் நாத் மிச்ரா (பீகார்) சித் தார்த்த சங்கர் ரே (மே. வங் கம்) எச். டி. ஜோஷி (ராஜஸ் தான்), எச். என். பகுகுணு (உ.பி). ஒய். எஸ். பார்மர் (ஹிமாசல பிரதேசம்) ஆகி யோரே இந்த கூட்டறிக் கையை விடுத்துள்ளார்கள்.

ஆந்திர முதல்வர் வெங்கல ராவும், கர்நாடக முதல்வர் தேவராஜ் அர்சும் இந்திரா காந்தி பதவியில் நீடித்து வர வேண்டுமென்று வேண்டு கோள் விடுத்துள்ளனர்.

பாகல்கோட் வந்துள்ள கர் நாடக முதன் மந்திரி தேவ ராஜ் அர்சு நேற்று இந்திரா காந்திக்கு டெலிபோன் செய்து, அவர் பிரதமராக நீடிக்க வேண்டு மென்றும், இது நாட்டு மக்களின் விருப் பம் என்றும், சொன்னார். இதை பிரதமர் சொந்த கௌரவப் பிரச்சினையாக நினைத்துவிடக் கூடாது என் றும் அவர் கூறினார்.

---

# 'புதிய பாடத் திட்ட புத்தகம் கிடைக்கவில்லை' தலைமை ஆசிரியர் புகார்

திருச்சி, ஜூன் 13—உயர் நிலைப்பள்ளிகள் திறந்து ஒரு வாரம் ஆகியும் 7, 8, 9-வது வகுப்புக்களுக்கானபுதியபாட திட்டபிரதிகள்பள்ளிகளுக்குக் கிடைக்கவில்லை என்று திருச்சி யில் உள்ள தலைமை ஆசிரியர் கள் தெரிவித்துள்ளனர்.

இதனால் வகுப்புகளுக்கான 'பாடநேரஅட்டவணை' தயா ரிக்கும் பணி இன்னும் ஆரம் பம் ஆகவில்லை என்று அவர் கள் தெரிவித்து இருக்கிறார் கள்.

புதிய பாடதிட்டம்குறித்து அதிகாரபூர்வமான தகவல் இன்னும் வரவில்லை என்றுஒரு பள்ளியின் தலைமை ஆசிரியர் தெரிவித்தார்.

ஆனால் புதிய பாட திட்டத் திற்கான புத்தகங்களை தமிழ் நாடு பாடநூல் நிறுவனம் ஏற்கனவே வெளியிட்டுவிட் டது.

புதிய பாடதிட்டம்குறித்து சென்னை பல்கலைக் கழகத்திற் கும் அரசிடம் இருந்து தகவல் எதுவும் வரவில்லை என்று பல்கலைக்கழக உயர் அதிகாரி ஒருவர் கூறினார்.

7-ம் பத்தி தொடர்ச்சி

வர்கள் இருப்பதா என் பதை பிரதம நீதிபதி முடிவு செய்யக்கூடும்.

சாதாரணமாக சுப்ரீம் கோர்ட்டில் ஒரு அப்பீல் விசா ரணை முடிவதற்கு பல மாதங் கள் ஆவது வழக்கம். ஆனால், இன்றைய தீர்ப்பின் விளை வாக ஏற்பட்டுள்ள அரசியல் ரீதியான நிச்சயமற்ற நிலை மைக்கு விரைவில் துரிதமாக முடிவு கண்டாக வேண்டு மென்று பிரதமர் தரப்பு வக் கில் வற்புறுத்துவார் என்று கருதப்படுகிறது.

---

# அ.தி.மு.க. பிரமுகர் ஜாமீனில் விடுதலை

மதுரை, ஜூன் 13— மதுரை நகர அண்ணு தி.மு. கழக அமைப்பாளர் பட்டு ராஜன் மற்றும் நான்கு வழக் கறிஞர்களும் ஜாமீனில் விடு தலை செய்யப்பட்டனர்.

முதலமைச்சர் கருணாநிதி யின உயிருக்கு ஆபத்து ஏற் படுத்த சதி செய்ததாக இவர்கள் கைது செய்யப்பட்டு இருந்தனர்.

எம். பட்டுராஜன், ஏ. அமல் ராஜ், எஸ். லட்சுமி நாராயணன், எம். கே. ராம கிருஷ்ணன், வி.எஸ். மாணிக் கம் ஆகிய ஐவரும் ஜாமீனில் விடப்பட்டு இருக்கிறார்கள்.

இதே குற்றச்சாட்டின் கீழ் கைது செய்யப்பட்ட வேறு இருபது அண்ணு திமு கழக தொண்டர்களை ஜூன் 22 ம் தேதி வரை காவலில் வைக் கும்படி மதுரை தலைமை மாஜிஸ்திரேட் உத்தரவிட் டார்.

---

# போராட்டம் நடந்தே தீரும்: திராவிடர் கழகம் அறிவிப்பு

தஞ்சை, ஜூன் 13— தஞ்சை பெரிய கோவில் கர்ப் பக் கிரகத்துக்குள் நுழையும் போராட்டத்தை ஆகஸ்ட் 15-ம்தேதி திராவிடர் கழகம் நடத்துகிறது.

அரிஜனங்களை அர்ச்சகர் களாக்கும் வகையில் தமிழக சட்டசபை தீர்மானம் நிறை வேற்றியது தெரிந்ததே. இது இந்திய அரசியல் சட்டத் துக்குப் புறம்பானது என்று சுப்ரீம் கோர்ட் தீர்ப்பளித் திருந்தது.

அரிஜனங்கள் அர்ச்சகர் களாகும் வகையில் இந்திய அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டும் என்று வற்புறுத்தி தஞ்சை பெரிய கோவில் கர்ப்பக்கிரகத்திற் குள் ஆகஸ்ட் 15ம் தேதி நுழைவோம்என்றுதிராவிடர் கழகம் அறிவித்துள்ளது.

இந்தப் பிரச்னையில் தமிழக அரசு மத்திய அரசுடன் பேசி வருவதால் போராட்டத்தை ஒத்திவைக்கும்படிமுதலமைச் சர் கேட்டுக்கொண்டார்.

திருவையாறில் நடைபெற்ற திராவிடர் கழகக் கூட்டத் தில் போராட்டம் நடந்தே தீரும் அறிவிக்கப்பட்டதாகத் தெரிகிறது.

---

அமைச்சர் நெடுஞ்செழியன் தகவல்:

# "மாணவர்களுக்கு குறைந்தபட்ச மார்க் நிர்ணயிக்க யோசனை"

**மதுரை, ஜூன் 13— ஆறும் வகுப்பில் இருந்து 10-ம் வகுப்பு வரை மாணவர்களுக்கு குறைந்த பட்ச மார்க்கை நிர்ணயிக்க அரசாங்கம் யோசித்து வருவதாக கல்வி அமைச்சர் நெடுஞ்செழியன் அறிவித்துள்ளார்,**

இப்படி குறைந்த பட்ச மார்க்நிர்ணயிப்பதால் 11வது வகுப்பை அடையும் போது அவர்களின் திறமை உயர வழி ஏற்படும் என்று அவர் தெரிவித்தார்.

மதுரை பல்கலைக் கழக சார் பில் நடந்த செமினார்முறை திட்டத்தை துவக்கிவைத்துப் பேசும்போது இந்த கருத்தை கல்வி அமைச்சர் வெளியிட் டார்.

குறைந்தபட்ச மார்க் நிர்ணயிப்பது குறித்து கல்வி இலாகாவினரை ஆராயும்படி சொல்லி இருப்பதாகவும் அமைச்சர் தெரிவித்தார்.

அமைச்சர் இதுபற்றி மேலும் குறிப்பிடுகையில் எஸ். எஸ். எல். சி. தேர்வில் குறைந்தபட்ச மார்க் நிர்ண யிக்கப்பட்டு இருக்கிறது. ஆனால் அதற்குக்கீழ் உள்ள வகுப்புக்களில் அப்படிப்பட்ட முறையில்லை என்றும் தெரி வித்தார்.

குறைந்தபட்ச மார்க்கை நிர்ணயிப்பதன் மூலம் தேர் வின் போது வேண்டியவர் களுக்கு உதவுவது, தவறுகள் இல்லாமல் போக வழி ஏற்ப டும் என்றும் அமைச்சர் தெரி வித்தார்.

---

# மதுவிலக்கு: தீவிரமாக அமுலாக்க கமிட்டி

தஞ்சாவூர், ஜூன் 13— தமிழ்நாட்டில் மதுவிலக்கை தீவிரமாக அமுல்படுத்துவதற் காக ஒரு கமிட்டி அமைக்கப் படும். இதில் அதிகாரிகளும் அதிகாரப்பற்றற்ற பிரமுகர் களும் இருப்பார்கள்.

இந்த தகவலை முதலமைச் சர் கருணாநிதி நேற்று முத்து பேட்டையில் நிருபர்களிடம் வெளியிட்டார்.

---

வறட்சி நிவாரண நிதி:

# "தமிழ்நாட்டுக்கு மத்திய சர்க்கார் பாரபட்சம்": அப்துல் சமத் புகார்

**திருப்பூர், ஜூன் 13— தமிழ்நாட்டுக்கு வறட்சி நிவாரண நிதி அளிப்பதில் மத்திய சர்க்கார் பாரபட்ச மாக நடந்து கொள்வதாகவும் தமிழ் நாட்டு நலன் களைக் கெடுக்கும் வகையில் ஒரு சதிகாரக் கும்பல் வேலை செய்து வருவதாகவும், முஸ்லிம் லீக் தலைவர் அப்துஸ் சமத் கூறினார்.**

தமிழ்நாடு மாநில முஸ்லிம் லீக் கட்சிக்கு புதிதாகதேர்ந்து எடுக்கப்பட்டநிர்வாகிகளுக்கு திருப்பூர் நகர முஸ்லிம் லீக் கட்சி சார்பில் பாராட்டு விழா பொதுக் கூட்டம் நடந் தது. திருப்பூர் பெரியகடை வீதியில் நடந்த இந்த கூட் டத்துக்கு எம். முஹம்மது சாலிஹா தலைமை வகித் தார்.

இதில் கலந்து கொண்டு முஸ்லிம் லீக் தமிழ்நாடு தலை வர் அப்துஸ் சமத் எம். பி. பேசியதாவது:—

இன்று நாட்டில் அரசியல் வாதிகள் பதவிக்காக பறக்கி றார்கள். சிலர் எப்படியும் ஆட்சியை பிடித்து விடலாம் என்று நாடகம் ஆடுகிறார்கள்.

ஆனால் சமுதாய குறைபாடு களை களைய முஸ்லிம் லீக் பாடு பட்டு வருகிறது. எந்த அரசி யல் கட்சியும் சமுதாயத்துக் காக வாதாடியது இல்லை. எனவே மற்ற கட்சிகளில் உள்ள முஸ்லிம்கள் தாய் கட் சிக்கு திரும்பி வர வேண்டும்.

### இந்திரா வராதது ஏன்?

தமிழ்நாட்டில் வறட்சி நிலவுகிறது. மக்கள் தவிக்கி றார்கள். இந்த நிலையில் ஓடி வந்து கைகொடுக்க வேண்டிய வர்கள், அதிகாரம் படைத்த வர்கள் வரவில்லை.

வறட்சியை சமாளிக்க வறட்சிநிவாரண பணிகளை தொடங்குவதற்கு டெல்லி சர்க்காரிடம் தமிழகமுதல்வர் கடனாகவோ மானியமாகவோ பணம் கொடுங்கள் என்று கேட்டார். ஆனால் வறட்சி நிதி வழங்குவதில் தமிழ் நாட்டை பொறுத்தவரை டெல்லிபாரபட்சமாகநடந்து விட்டது.

பீகாரிலே வறட்சி என்ற தும் 32 கோடி ரூபாய் வாரி வழங்குகிறார்கள், தமிழ் நாட்டில் வறட்சி என்றால் ரூ. 15 கோடி தருகிறார்கள்,

தமிழ்நாட்டில்வறட்சியால் பாதிக்கப்பட்ட பகுதிகளை சுற்றிப் பார்க்க இந்திரா வர வில்லை. தமிழக மக்களுக்கு ஆறுதல் வார்த்தைகூட கூற வில்லை.

ஆந்திர முதன் மந்திரி வெங்கல்ராவ்தமிழ்நாட்டுக்கு வந்தார். அப்போதுதமிழ்நாடு முதல் அமைச்சரிடம் 5 ஆயி ரம் டன் அரிசி தருவதாக வாக் களித்தார். பத்திரிகைகள் அவரை பாராட்டியது. நாமும் பாராட்டினோம்.

### சதிகாரக் கும்பல்

ஆனால் அவர் ஆந்திரா சென்றதும் நமது முதல் அமைச்சர் அரிசி தரும்படி கேட்டார், அதற்கு டெல்லி சர்க்கார் உத்தரவு வேண்டும் என்கிறார் வெங்கல்ராவ்,

இங்கு உறுதி கூறிவிட்டு சென்றவர் டெல்லி சர்க்கா ரின் அனுமதி வேண்டும் என்கிறார், இடையிலே நடந்தது என்ன? ஏதோ ஒரு சதிகார கும்பல் வேலை செய்கிறது.

கடந்த ஆண்டு உபரியாக இருந்த அரிசியை நாம் குஜ ராத்துக்கும், கேரளாவுக்கும் கொடுக்கவில்லையா? உபரி அரிசியை விலைக்கு தானே கேட்டோம். தரமுடியாத நிலைக்கு நிர்ப்பந்தமாக ஆட் படுத்தப்பட்டுஇருக்கிறார்கள்.

### இந்திரா என்ன கருதுகிறார்?

தமிழ் நாட்டில் இ. காங் கிரஸ் கட்சிக்கு செல்வாக்கு இல்லாததால் தமிழ்நாடே இல்லை என்று இந்திரா கருது கிறாரா? தரங்கெட்ட அரசி யல் நடத்துகிறார்கள்.

இன்று அரசியல் அரசிய லாக நடக்கவில்லை. தனிப் பட்டவர்கள் வாழ்க்கையைப் பற்றி பேசும் தரங்கெட்ட நிலைக்கு போய்விட்டது. ஆனால் ஒழுக்கமான அரசியல் நடத்தவேண்டும் என்று முஸ் லிம் லீக் கருதுகிறது.

எந்த அரசியல கட்சியானு லும் முஸ்லிம் சமுதாய மேம் பாட்டுக்காக பாடுபட்டால் அவர்களுக்கு பக்கபலமாக இருப்போம்.

இவ்வாறு அப்துஸ் சமத் பேசினார்.

மற்றும் திருப்பூர் மொகி தீன் எம். எல். ஏ. மாநில பொதுச் செயலாளர் எம் ஏ லத்தீப் எம். எல். ஏ., மாநில இணைச் செயலாளர், எஸ். எம். முகமது ஷரீப் எம். பி., கோவை மாவட்ட முஸ்லிம் லீக் தலைவர் காதர் இப்ராகீம் மாவட்ட செயலாளர் சி. ஐ. அல்லாபிச்சை முகமது யாகூப், நகர தி. மு. க. செயலாளர் ப. கோபாலன் ஆகியோர் பேசினார்கள்.

---

# இந்திரா அப்பீல்: தாக்கல் செய்ய 4 நாள்

புதுடெல்லி, ஜூன் 13— அலகாபாத் ஹைகோர்ட் தீர்ப்பை எதிர்த்து பிரதமர் இந்திரா காந்தி சுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் தாக்கல் செய்ய 4 அல்லது 5 தினங் கள் ஆகக்கூடும்.

258 பக்கங்கள் உள்ள இந்தத் தீர்ப்பை பிரதமரின் சட்ட ஆலோசகர்கள் நன்கு பரிசீலிக்க 4 அல்லது 5 தினங்கள் பிடிக்கும், தீர்ப்பு இன்று டெல்லி வந்து சேரும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

பதவியில் நீடிப்பது என்று பிரதமர் முடிவு செய்திருக் கிறார். தம்முடைய அப்பீலை சுப்ரீம் கோர்ட் இறுதியாகப் பைசல் செய்யும் வரை, அலகாபாத் தீர்ப்பின் அமுலை "முழு அளவில்" நிறுத்தி வைக்குமாறு கோரி அவர் மனு தாக்கல் செய்வார். அவர் நீடிப்பது, அந்த மனு மீது சுப்ரீம் கோர்ட் அளிக்கும் தீர்ப்பைப் பொறுத்ததா யிருக்கும்.

சுப்ரீம் கோர்ட்டில் விடு முறை கால நீதிபதியின் முன்பு அப்பீல் தாக்கல் செய் யப்பட்டதுமே, அலகாபாத் ஹைகோர்ட்டின் தடை உத் திரவு காலாவதியாகி விடு மென்று சட்ட நிபுணர்கள் கருதுகிறார்கள். எனவே அப் பீல் இறுதியாகப் பைசலா கும் வரை, தடை உத்த ரவை மேலும் நீடிக்குமாறு கோரும் மனு ஒன்றை யும் அப்பீலுடன் கூடவே சுப்ரீம் கோர்ட்டில் பிரதமர் தாக்கல் செய்ய வேண்டியிருக் கும் என்று கருதப்படுகிறது.

இந்த அப்பீலைப் பற்றும், தடை உத்திரவு நீடிப்புக்கான மனுவைப் பற்றும் ராஜ் நாராயணனுக்குசுப்ரீம்கோர்ட் நோட்டீஸ் அனுப்பியாக வேண்டும். ஏனெனில், இவ் வாறு நோட்டீஸ் அனுப்பு மாறு கோரி ராஜ் நாராயண் சுப்ரீம் கோர்ட்டில் மனு தாக் கல் செய்துள்ளார். எனவே தடை உத்தரவு பிறப்பிப்பது பற்றியோ, அல்லது அப்பீல் விசாரணைக்கு அனுமதிப்பது பற்றியோ கோர்ட் முடிவு செய்வதற்கு முன்னால், ராஜ் நாராயணனின் வக்கீலின் வாதத்தை சுப்ரீம் கோர்ட் கேட்டாக வேண்டியிருக்கும்.

அலகாபாத் கோர்ட்டின் தடைஉத்தரவு காலாவதியா வதற்கும், சுப்ரீம் கோர்ட் புதிய தடையுத்திரவு ஒன்றை பிறப்பிப்பதற்கும் இடையிலுள்ளஇடைக்காலம் ஒருசிலமணிநேரம்அளவுக்கே இருக்கும் என்று சட்ட நிபு ணர்கள் எதிர்பார்க்கிறார்கள்.

சுப்ரீம் கோர்ட் தடையுத்தி ரவையடுத்து, அப்பீல் விசா ரணைக்கு வரும், இதை சுப் ரீம் கோர்ட்டின்பெஞ்சுஒன்று விசாரிக்கும், அந்த பெஞ்சில் 3 நீதிபதிகள் இருப்பதா, அல் லது அதற்கு மேற்கொண்ட

2-ம் பத்தி பார்க்க

---

ஆமில்டன் பாலத்திற்கு பெயர் மாற்றம்:

# அம்பேத்கார் பாலம் ஆகிறது

சென்னை, ஜூன் 13—பல்ல வன் போக்குவரத்துக் கழக பஸ் புறப்படும் இடமான ஆமில்டன் பாலத்திற்கு அம் பேத்கார் பாலம் என்று பெயர் மாற்றம் செய்யப்பட் டுள்ளது. இனிபஸ்களில்ஆமில் டன பாலம் என்பதற்குப்பதில் அம்பேத்கார் பாலம் என்று குறிப்பிடப்பட்டிருக்கும்.

பல்லவன் போக்குவரத்துக் கழக 29ம் எண் உள்ள பஸ் கள் பெரம்பூரிலிருந்து கலைக் கல்லூரி வரை சென்று வந் தவை, தியாகராயநகர் வரை நீடிக்கப்பட்டுள்ளன.

இனி 29ம் எண் உள்ள பஸ்கள் தியாகராய நகரில் இருந்து பெரமபூருக்குச் செல் லும். இந்த வழித்தடத்தில் மேலும் இரு பஸ்கள் விடப் பட்டுள்ளன. பிரயாண நேரம 52 நிமிடங்கள், கட் டணம் 60 காசு.

---

# 45 அடி உயர சிலை திறப்பு

பிரோசாபாத் (ஆக்ரா) ஜூன் 13—ஜைன முனிவர் பாகுபாலியின் மிகப் பெரிய சிலை ஒன்றை துணை ஜனாதிபதி பி. டி. ஜாட்டி திறந்து வைத் தார்.

இந்த சிலையை ஆக்ராவிற்கு அருகில் இருக்கும் பிரோசா பாத் ஜைனக் கோவிலில் அவர் திறந்து வைத்தார்.

45 அடி உயரம் உள்ள இந்த சிலையின் எடை 130 டன்களாகும். மைசூரைச் சேர்ந்த ஆர். ஜி. ஷெயின் தலைமையில் 35 சிற்பிகள் இந்த சிலையை உருவாக்கினர்.

மைசூரில் இருந்து இந்த சிலை தனி ரெயிலில் பிரோசா பாத்திற்கு கொண்டுவரப்பட் டது. சிலை வந்து சேர 4 மாதங்களாயிற்று.

---



Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P. P. S. Press, No. 4, South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.

Editor-in-charge : G. Dhanaraj.